KALKI 18.7.93 ரூ. 3.00

# கல்கி

உள்ளே....
அழவைக்கும்
அட்மிஷன்
பிரச்னை!



மாமியார்-மருமகள்: மகிழ்ச்சியான உறவின் மனோதத்துவம்

# லட்சக் கணக்கான மக்களின் தலைமுடி பிரச்சினையைத் தீர்த்து விட்ட ஒரே ஒரு கூந்தல் தைலம்

# அஸ்வினி

## ஹோமியோ ஹேர் ஆயில்






**நல்ல பலன்களைப் பெற அஸ்வினியை உபயோகிக்க வேண்டிய முறை**

1. முடி உதிர்வதைத் தடுத்திட : 15 முதல் 20 நாட்கள் வரை ஆகலாம். அஸ்வினியுடன் வேறு எந்த எண்ணெயையும் சேர்க்க வேண்டிய தேவையில்லை. நேரடியாக உபயோகிக்க வேண்டும்.
2. நரை முடி கருத்திட : சுமார் 20 வயதானவர்களுக்கு ஏறக்குறைய 3 லிருந்து 4 மாதங்களும், 30 வயதானவர்களுக்கு ஏறக்குறைய 6 லிருந்து 8 மாதங்களும், 45 வயதானவர்களுக்கு ஏறக்குறைய 12 மாதங்களும் ஆகலாம்.
3. தலைவலி: பலர் தலைவலி குறைந்ததாகக் குறிப்பிட்டு நன்றி தெரிவித்துக் கடிதங்கள் எழுதுகின்றனர். தலைவலிக்கும் கூட அஸ்வினி ஹேர் ஆயிலை உபயோகிக்கலாம்.
4. மூளையைக் குளிர்வித்து நல்ல தூக்கம் வரச் செய்யும்.

மேற்கூறியபடி தினந்தோறும் உபயோகித்தால் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் காணப்படும்.

எண்ணற்றவர்கள் கடிதங்கள் வாயிலாக அவர்களின் திருப்தியைத் தெரிவித்துக்கொண்டிருக்கிறார்கள்.

**அஸ்வினிக்கு நன்றி!**

உண்மையாகவே இது அஸ்வினி தேவதைகளினால் அனுப்பப் பட்ட அமோகமான ஔஷதம். ஏனெனில், இதனை எனது பேரன் (மகளின் மகன்) தலைமுடிக்கு உபயோகித்துப் பார்த்தேன். குழந்தை வழுக்கைத் தலையோடு பிறந்தான். இரண்டு பாட்டில்கள் எண்ணெய்யை உபயோகித்தப் பிறகு, நல்ல பலன்கள் காணப்பட்டன. மேற்படி உபயோகித்ததன் காரணமாக, அடர்த்தியான, அழகான, மிருதுவான, நிறைந்த தலைமுடி வளர்ந்து விட்டது.

ஆகையால் தலைமுடி வளர்ந்திட, நரை முடி கருத்திட, வழுக்கையை அகற்றிட அஸ்வினி ஹோமியோ ஹேர் ஆயிலைத் தான் உபயோகித்துப் பார்க்க வேண்டும்.

I. புல்லன்னா, I.P.S. (Retd).



தயாரிப்பாளர்கள்:
அஸ்வினி ஹோமியோ பார்மஸி
மூஸாபெட், ஹைதராபாத் 500 018.

MAC/AHP/935/TAN

''எம்.எல்.ஏ. முயற்சி எடுத்ததால் பாருங்க.. இந்தப் பள்ளியில் கட்டட ரிப்பேர் வேலைகள் நடக்கின்றன. அறைகளைப் பிரிக்க இருக்கிறோம். கட்சி வித்தியாசம் பார்க்காமல், இந்த சமுதாயப் பணிக்கு அனைவரும் கைகொடுக்க வேண்டும்...''

* எஸ்.எம். கிருஷ்ணன்

# கல்விப் பணியுடன் கைகுலுக்கும் எம்.எல்.ஏ.!

* ஒரே ஆசிரியரின் கீழ்...

''பணம் இருப்பவர்கள் உயர்தர கான்வென்டுகளில் பிள்ளைகளைப் படிக்க வைக்கிறார்கள். நடுத்தர மக்கள் எப்படியோ கஷ்டப்பட்டு, சுமாரான பள்ளிகளில் படிக்க வைக்கிறார்கள். ஏழைகளுக்கும், கிராமப்புறங்களில் இருப்பவர்களுக்கும் என்ன வழி? அரசுப் பள்ளிகளை விட்டால் வேறு கதி? தனியார் பள்ளிகளில் இருக்கின்ற வசதியும் வாய்ப்பும் அங்கே உண்டா? கிராமப்புறத்தில் மரத்தடியில் பள்ளிகள் நடப்பதை விடுங்கள்; ஆசிரியரே இல்லாத வகுப்புகள் எத்தனை? போதாததற்கு ஒரே பெரிய அறையில் இரண்டு மூன்று வகுப்புகள். ஆசிரியர் எப்படி எல்லா பிள்ளைகள் மேலும் கவனம் செலுத்த முடியும்? அரசாங்கம் கல்வித் துறைக்கு எவ்வளவோ செலவழித்துக் கொண்டிருந்தாலும், தேவைகள் அதிகரித்துக் கொண்டே போவதால் அரசாங்கத்தால் எல்லாவற்றையும் செய்து விட முடியாது. இந்த நிலையில், 'நம்மால் என்ன செய்ய முடியும்?' என்று யோசித்தேன்! அதன் விளைவுதான் இந்தத் திட்டம்'' என்றார் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த தாம்பரம் தொகுதி சட்டமன்ற உறுப்பினராகிய எஸ். எம். கிருஷ்ணன்.

''ஒரு அறையில் ஒரு வகுப்பு; ஒரு வகுப்புக்கு ஒரு ஆசிரியர்'' - இதுதான் கிருஷ்ணன் அறிமுகப்படுத்தும் திட்டம். தமது தொகுதியில் உள்ள ஊராட்சி துவக்க, நடுநிலைப் பள்ளிகளை முதலில் எடுத்துக் கொண்டுள்ளார் கிருஷ்ணன். ''இந்தப் பள்ளிகளில் 53 ஆசிரியர் பதவிகள் பல்லாண்டு

களாகப் பூர்த்தி செய்யப்படாமல் இருக்கின்றன. முதலில் 53 ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்து இந்தப் பள்ளிகளுக்கு அனுப்பப் போகிறேன்'' என்றார் கிருஷ்ணன்.

''நீங்கள் எப்படி தேர்ந்தெடுக்க முடியும்? மேலும் அவர்களுக்குச் சம்பளம் எப்படிக் கொடுப்பீர்கள்?''

''என்னால் நிரந்தரமாக அவர்களை நியமிக்க முடியாதுதான். ஆனால் அரசு இடங்களைப் பூர்த்தி செய்யும் வரை தற்காலிகமாக அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாமே! ஆசிரியர் பயிற்சி முடித்து விட்டு ஆயிரக்கணக்கானவர்கள் வேலையில்லாமல் இருக்கிறார்களே!''



* மேடவாக்கம் பள்ளி

கிருஷ்ணன், ஒவ்வொரு ஆசிரியருக்கும் மாதம் 600 ரூபாய் ஊதியமாகத் தர இருக்கிறாராம். மாதம் சுமார் 35 ஆயிரம் செலவாகுமாம்.

''இதற்காக, நிதி உதவிக்குச் செல்வந்தர்களை நாடியுள்ளேன். பலர் முன்வந்துள்ளனர். திட்டத்தைத் துவக்கி வைத்த மத்திய அமைச்சர் தங்கபாலு கூட தமது ஒரு மாத சம்பளத்தை நன்கொடையாக அளித்துள்ளார். மூன்று மாதங்களுக்குள் சம்பந்தப்பட்ட பள்ளிகளில் பெற்றோர் - ஆசிரியர் சங்கத்தை உருவாக்கி, அதன் மூலம், உள்ளூரிலேயே நிதி ஆதாரத்தை உருவாக்கி விடுவேன்'' என்று நம்பிக்கையுடன் தெரிவிக்கிறார் கிருஷ்ணன்.

**எம்.** எல்.ஏ.வுடன் அவரது தொகுதியில் உள்ள இரண்டு கிராமப்பகுதி பள்ளிகளுக்குச் சென்ற போது திட்டத்தைச் செயல்படுத்த அவர் அவசரம் காட்டுவதில் உள்ள நியாயம் புரிந்தது. மேடவாக்கத்தில் உள்ள பரங்கிமலை ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளியில் மொத்தம் 666 மாணவ மாணவிகள் படிக்கிறார்கள். ஆனால் இருப்பதோ எட்டு ஆசிரியர்கள்தாம்! அதிலும் குறிப்பாக இரண்டாம் வகுப்பில் ஒரே ஆசிரியையின் கீழ் 139 பிள்ளைகள் படிக்கிறார்கள்! இது தவிர, இரண்டாம், மூன்றாம் வகுப்புகள் ஒரே ஹாலில் நடைபெற்றுக் கொண்டிருந்தன. கூரைகள் பிய்ந்தும், கதவுகள் இல்லாமலும் கட்டடம் பரிதாபமாகக் காட்சியளித்தது.

''ஏற்கெனவே, மாணவர்கள் அதிகம். இந்த நிலையில் இரண்டு வகுப்புகளை ஒரே ஹாலில் வைத்தால் எப்படி? பிள்ளைகள் படிப்பில் எப்படி கவனம் செலுத்த முடியும்? இந்த ஹாலை சுவர் தடுப்பு போட்டுப் பிரித்து இரண்டு வகுப்பறைகளாக மாற்றப் போகிறோம்'' என்றார் கிருஷ்ணன். இந்தப் பள்ளியில் குறைந்தபட்சம் இன்னமும் நான்கு ஆசிரியர்கள் உடனடித் தேவை.

**சி**த்தாலப்பாக்கம் நடுநிலைப் பள்ளியில் மூன்று வகுப்புகளை ஒன்றாக நடத்திக் கொண்டிருந்த ஆசிரியை ஒருவர் எம்.எல்.ஏவைப் பார்த்ததும், ''எனக்கு வயத்துல மேஜர் ஆபரேஷன் நடந்திருக்கு. இவ்வளவு பசங்களை வச்சுக்கிட்டு, என்னால எப்படி சொல்லித் தர முடியும்?'' என்று கண்ணீர் விட்டார்.

''எம்.எல்.ஏவின் திட்டம் நல்ல திட்டம்'' என்று வரவேற்கிறார் பஞ்சாயத்துத் தலைவராக இருந்த சங்கர். இவர் அ.தி.மு.க.வைச் சேர்ந்தவர். ''எம்.எல்.ஏ. முயற்சி எடுத்ததால் பாருங்க.. இந்தப் பள்ளியில் கட்டட ரிப்பேர் வேலைகள் நடக்கின்றன. அறைகளைப் பிரிக்க இருக்கிறோம். கட்சி வித்தியாசம் பார்க்காமல், இந்த சமுதாயப் பணிக்கு அனைவரும் கை கொடுக்க வேண்டும்'' என்கிறார் சங்கர். இதே பள்ளியில் தலைமை

* சங்கர்



யாசிரியையாக இருக்கும் திருமதி ஆலிஸ், ''கிராமப் பசங்க, புத்தி சாலித்தனத்தில் கொஞ்சமும், நகர்புற பசங்களுக்குக் குறைஞ்சவங்க இல்லை. ஆனா வசதிகளும் வாய்ப் பும் போதவில்லை. இந்தப் பள்ளியைப் பார்வையிட வரும் கல்வி அதிகாரிகள் 'ஆசிரியர்களை நியமித்துக் காலி இடங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும்' என்று மேலிடத்துக்குப் பலமுறை எழுதியுள்ளார்கள். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை. இந்த நிலையில் குறைந்தபட்சம் எல்லா வகுப்புகளுக்கும் ஆசிரியர்களாவது இருக்கட்டுமே என்ற ரீதியில், தமது திட்டத்தை அறிமுகப்படுத்தி இருக்கிறார் எம்.எல்.ஏ. ஒரு தெளிவான பாதையை நோக்கி நல்ல துவக்கம்'' என்கிறார். பள்ளியில் பெற்றோர் - ஆசிரியர் சங்கத்தை ஏற்படுத்தும் முயற்சியிலும் இறங்கியிருக்கிறார் இவர்.

**எம்.** எல்.ஏவின் வேகத்துக்கு மாவட்ட அதிகாரிகளும் ஈடு கொடுக்கிறார்கள். கலெக்டர் மற்றும் கல்வித் துறை அதிகாரிகளின் முழு ஒத்துழைப்பும் கிடைத்திருக் கிறதாம்.

''ஒரு பக்கத்தில் ஏகப்பட்ட ஆசிரியர் வேலைகள் காலியாகக் கிடக்கின்றன. மற்றொரு பக்கத்தில் பயிற்சி முடித்து விட்டு வேலையில்லாமல் பலர் இருக்கிறார்கள். இந்த முரண்பாடு ஏன்?'' என்று எம்.எல்.ஏ.விடம் கேட்டோம்.

''அரசாங்கத்தில் ஆட்களைத் தேர்ந்தெடுக்க மிகவும் தாமதம் ஆகிறது. இதை நான் விவரித்தால் விவகாரம் அரசியலாகி விடும். மேலும் வருடத்துக்கு இத்தனை ஆசிரியர்கள் என்று அரசு தேர்ந்தெடுப்பவர்களை அரசு உதவி பெறும் தனியார் பள்ளிகள் கொத்திச் சென்று விடுகின்றன. மிச்சம் மீதி உள்ளவர்களைக் கிராமப் பகுதியி



● எம்.எல்.ஏ. முயற்சியில் கட்டட வேலைகள்

லுள்ள அரசுப் பள்ளிகளில் போட்டால் அவர்கள் பணிக்கு வந்து சேருவதே யில்லை... இதுபோன்ற பள்ளிகளில் ஆசிரியர் இடங்கள் காலியாக இருப்ப தற்கு இதுதான் காரணம். சமுதாய நோக்கமும் சேவை மனப்பான்மை யும் தேவைப்படுகின்றன.''

''நீங்கள் தேர்ந்தெடுத்து அனுப்பப் போகும் ஆசிரியர்களுக்கும் இதே வாதம் பொருந்தும் அல்லவா? சம்பளமும் குறைவு...''

''நீங்கள் சொல்வது சரிதான். கூடிய மட்டும் பயிற்சி பெற்ற ஆசிரியர்களைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறேன். 'உங்களுக்கு வேறு நல்ல வேலை கிடைத்தால் போய் விடலாம்' என்றும் சொல்லியிருக்கிறேன். கூடிய மட்டும் அவர்கள் வசிக்கும் ஏரியா அருகிலேயே உள்ள பள்ளிகளில் வேலை செய்யச் சொல்லி இருக்கிறேன். பலருக்குச் சமூகக் கண்ணோட்டம் இருப்பது அவர்களோடு பேசியதில் புரிந்தது.''

பலரக எம்.எல்.ஏக்களைப் பார்த்துள்ள நமக்குக் கிருஷ்ணன் வித்தியாசமானவராகத் தென்படுகிறார்.

''இந்த சமூக திட்டத்தில் அரசியலைக் கலக்க நான் விரும்பவில்லை. அரசு, பொது மக்கள், அதிகாரிகள் என்று எல்லா தரப்பி லிருந்தும் ஆதரவு வந்தால்தான் திட்டம் வெற்றியடையும். அரசு, கட்சிக் கண்ணோட்டம் பார்த்துச் செயல்பட ஆரம்பித்தால் அதையும் எப்படிச் சமாளிப்பது என்று எனக்குத் தெரியும்'' என்கிறார்.

- ப்ரியன்

படங்கள் : கோபிநாத்



# கல்கி

1. 8. 93
ஆண்டு மலர்

## 'சூப்பர்' சிறப்பிதழ்

சூப்பர்மேன் முதல்

சூப்பர் மார்க்கெட் வரை....

வியப்பு; சிரிப்பு; பிரமிப்பு!

ரூ. 1,500 முதல் பரிசு பெறும் சிறுகதை



## மடிமீது தலை வைத்து

**சுபா**

எழுதும் வித்தியாசமான காதல் தொடர்கதை ஆரம்பம்!





● சாம்பிராஸ்

● நொவோத்னா

# விம்பிள்டன் 93

## வெற்றிச் சிரிப்பும் தோல்வியின் அழுகையும்!

"இன்றைக்கு ஆடிய மாதிரி, நொவோத்னா விளையாடினால், இறுதி ஆட்டத்தில் அவளுக்கு வெற்றி நிச்சயம்!" - சொன்னவர் மார்ட்டினா நவரத்திலோவா.

ஆனால் அதிர்ஷ்டம் நொவோத்னாவின் பக்கம் இருக்கவில்லை. முதல் இரண்டு செட்களில் பிரமாதமாக ஆடியதோடு, மூன்றாவதில் முன்னேறிக் கொண்டிருந்தவரை, ஸ்டெஃபி கிராஃப் தடுத்து நிறுத்தி, வெற்றிக் கனியைத் தட்டிச் சென்று விட்டார்.

''நான் நெர்வஸ் ஆகி விடவில்லை. என்னால் அந்த அளவுக்குத் தாக்குப் பிடிக்க முடியவில்லை!'' என்றார் நொவோத்னா.

கென்ட் இளவரசியிடம் பரிசுத் தட்டை வாங்க வந்த போது அவரது துக்கம் வெடித்துக் கொண்டு வந்தது. அழுகையை அடக்க மாட்டாமல், அவர் இளவரசியின் தோள்களில் குமுறிய போது, கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போனதே என்ற துடிப்புத் தான் தெரிந்தது.

நொவோத்னா, செக்கோஸ்லோவாக்கிய ஆட்டக்காரர். வயது இருபத்து நாலு. குரு, ஹானா மாண்ட்லிகோவா, 88ல் குருவைத் தோற்கடித்த நவரத்திலோவாவை, விம்பிள்டனில் வென்ற ஆறுதல் நொவோத்னாவுக்குக்

விம்பிள்டன் பெண்கள் டென்னிஸ் போட்டியின் 'நூற்றாண்டு' இது! விம்பிள்டனில் முதன் முதலில் பெண்களுக்கான போட்டி நடத்தப் பட்டது, ஆண்களுக்கான போட்டி ஆரம்பித்து ஏழு ஆண்டு களுக்குப் பிறகுதான். அந்தப் போட்டியின் இறுதிப் பந்தயத்தில் 19 வயதான மாட் வாட்சன் என்ற பெண்ணும் அவள் மூத்த சகோதரி லிலியனுமே போட்டி யானார்கள்! அந்தப் போட்டியைக் கண்டு களித்த ரசிகர் 'கூட்டத்தின்' எண்ணிக்கை 500 மட்டுமே.

அந்தக் காலத்தில் விளையாட்டு வீராங்கனைகள் எந்தவிதமான உடற் பயிற்சியும் செய்யவில்லை. இரண்டு சகோதரிகளுக்கும் பயிற்சியாளர்களோ, டிரெய்னர்களோ, ஏஜெண்டுகளோ கிடையாது. தங்கள் வீட்டுக் கொல்லைப்புறத்தில் இருந்த சிறிய பகுதியே இவர்கள் பயிற்சிக் களம்!

சரி, இவர்களில் வெற்றி பெற்ற வருக்குக் கிடைத்த பரிசுத் தொகை எவ்வளவு? ஒரு பைசா கூட இல்லை! போனால் போகிறதென்று ஒரு சின்ன வெள்ளிக் கோப்பையைப் பரிசாகக் கொடுத்தார்கள்.

இன்றையப் பெண்கள் மிகக் கடுமையான உடற்பயிற்சிகளும், உளவியல் பயிற்சிகளும் பெற்றவர்களாக இருக்கிறார்கள். எல்லோருக்கும் ஏஜெண்ட், ட்ரெய்னர், கோச் உண்டு. இந்த ஆண்டு பெண்கள் இறுதிப் போட்டியை டீ.வி. மூலமாகவும் நேரிலும் சுமார் 60 கோடி பேர் பார்த்து ரசித்தார்கள்.

வெற்றி பெற்றவருக்குக் கிடைத்த தொகை சுமார் 3/4 கோடி ரூபாய்! இவ்வளவு இருந்தும் விம்பிள்டன் பெண்கள் போட்டி இரண்டாம்பட்சம்தான். ஆண்கள் போட்டிக்குத்தான் முதலிடம். பெண்கள் பரிசுத் தொகையை விட ஆண்கள் பரிசுத் தொகை 50,000 டாலர்கள் அதிகம். ரசிகர்களிடையேயும் ஆண்கள் இறுதிப் போட்டிதான் அதிக எதிர்பார்ப்பையும் பரபரப்பையும் உண்டுபண்ணுகிறது!

– எஸ். ஆலன்

கிடைத்தது. ஆனால் விம்பிள்டன் நூறாவது பெண்கள் சாம்பியன்ஷிப் ஆட்டத்தில் நூலிழையில் தோற்ற காயம் ஆறக் கொஞ்ச நாள் ஆகலாம்!

"பரிசுக் கோப்பையைத் தூக்கிக் கொண்டு விம்பிள்டன் மைதானத்தில் நடந்து வருவதைப் போன்ற உணர்ச்சிக்கு ஈடாக வேறு எதுவுமே இல்லை! அதை நான் இன்று முழுக்க முழுக்க அநுபவித்தேன்!" என்றார் பீட் சாம்ப்ராஸ்.

வேர்க்க விறுவிறுக்க வெயிலில் ஆடி, சுமார் ஒன்றரைக் கோடி ரூபாய் விம்பிள்டன் போட்டியில் சம்பாதித்த சாம்ப் ராஸ், உணர்ச்சிகளை வெளியில் காட்டிக் கொள்ளாமல் ஆடுகிறவர். அதனாலேயே ரசிகர்களிடம் புகழ் பெற முடியவில்லை. எப்போது பார்த்தாலும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டும் நாக்கைத் துருத்திக் கொண்டும் இவர் ஆடுகிற ஆட்டம் பிரிட்டிஷ் ரசிகர்களுக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லையாம்!

ஆனாலும் என்ன?

கடைசி 'கேம்'களில், [illegible] மகிழ்ந்து [illegible]க் கைதட்டி ரசிக்க[illegible] [illegible] வெகுவாக சந்தோஷ[illegible] பட்ட [illegible] சாம்ப்ராஸின் [illegible]ம். அப்போதும் பின்னால் [illegible]டுகிறதைப் பார்க்கவே முடிவதில்லையாம். உணர்ச்சி வசப்பட்டு விடுவோமோ என்ற பயம்!

இருபத்தோரு வயது சாம்ப் ராஸ் அமெரிக்காவில் வாஷிங் டனில் பிறந்தவர்; இப்போது வசிப்பது ஃப்ளாரிடாவில். மாவீரர் குரு ராட் லேவர். தற்போதைய கோச் : டிம் குல்லிக்சன். ஏழு வயதிலேயே டென்னிஸ் ஆட ஆரம்பித்தவர் சாம்ப்ராஸ். 1990ல், யு.எஸ்.ஓபன் பட்டம் பெற்ற போது 19 வயது தான்!

இத்தனைக்கும் சாம்ப்ராஸின் தோள் பட்டைக் காயம் அவருக்கு வலியைக் கொடுத்துக் கொண்டிருந்தது. "அதை நான் பொருட் படுத்தவில்லை. மனசில்தான் எல்லாமே இருக்கிறது!" என்றார் சாம்ப்ராஸ்.

அமெரிக்க சுதந்திர நாளான ஜூலை 4 ஆம் தேதி ஓர் அமெரிக்க டென்னிஸ் வீரர் விம்பிள்டன் சாம்பியன் ஆவது ஒரு பெரிய கௌரவமாகக் கருதப்படுகிறது.

– நம்பி

# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம். நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.



இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25,
புதுதில்லி-110016

**நெஸ்டம்**

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

TS McCann/NESTUM/1492 TM

முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபின் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைக்கு தானிய உணவும் கொடுங்கள்



# மாமியார்-மருமகள் மகிழ்ச்சியான

உள்ளாடைகளைக் கூட மாமியார்தான் தேர்ந்தெடுத்து வாங்குகிறார்! சாந்தியும் மற்ற மருமகள்களும் மனத்துக்குள் குமைவதோடு சரி...



● விஜயா

அட்டையில் சந்தோஷமாய்ச் சிரிக்கும் விஜயா பாலகிருஷ்ணனும் உமா பிரபாத்தும் மகிழ்ச்சியான மாமியார் - மருமகள் உறவுக்கு உதாரணம்.

''நிஜமாகவே உங்களுக்குள் சண்டையே வராதா...?'' என்று கேட்டால் இருவரும் சிரிக்கிறார்கள்.

''ஏன் சண்டை வரணும்...?''

''கருத்து வேறுபாடு இருக்கலாம்...''

''அதெல்லாம் இருக்கத்தான் செய்யும். உடனே சண்டை போடுவதா...? அம்மா

என் யோசனைக்கு மாறாக எதையாவது சொன்னால் அவர் இடத்தில் என்னை நிறுத்திப் பார்ப்பேன்... அப்போ அவர் சொல்வதில் இருக்கிற நியாயம் புரியும்... எந்த உறவுச் சிக்கலுக்கும் இது சுலபமான தீர்வு...'' என்கிறார் உமா.

''எந்த உறவுலயும் சிக்கல் வரும். அம்மாவுக்கும் பெண்ணுக்கும் கூட வருகிறதே... அதையெல்லாம் நாம் தினமும் நினைத்து மாய்ந்து போவதில்லை... மற்றவர்களிடம் பேசிப் பேசி பச்சாதாபம் தேடுகிறதில்லை... ஆனால் மாமியார் - மருமகள் என்னும் போது மட்டும் அதைப் பெரிது படுத்தறோம்... இது அனாவசியமாக நாமே வளர்த்துக்கற பிரச்னை...''

- உமாவின் இந்தக் கருத்தை ஆமோதிக்கும் விஜயா, ''மருமகளும் வீட்டில் ஒருத்தி - அவள் சொல்வதையும் நாம் ஏற்றுக்கலாம்ங்கற பக்குவம் மாமியாருக்கு இருக்கணும் - உமா சொல்றது சரி என்று தோன்றினால் நான் ஏற்றுக்குவேன்... இல்லைன்னு தோணினாலும் 'அது அவ கருத்து'ன்னு அதுக்கு ஒரு மரியாதை கொடுப்பேன். சண்டையெல்லாம் ஏன் வரணும்...? நமக்கு என்ன வேலை இல்லையா...? முன் காலத்தில் வீட்டுப் பெண்களுக்குப் பொழுது போகாமல் இருந்திருக்கும்... அதனால் மருமகளைச் சீண்டி வேடிக்கை பார்க்கலாம்னு நினைச்சிருக்கலாம்....'' என்கிறார்!

உமாவையும் விஜயாவையும் இணைக்கும் பாலமாக இருக்கிறது தையற்கலை.

குழந்தைகளுக்கு அழகழகான உடைகளை இருவரும் சேர்ந்து வடிவமைத்துத் தைத்துத் தருகிறார்கள்.

''இந்த common interest எங்களைச் சீக்கிரமாக நெருங்கி வரச் செய்திருக்கு...'' என்கிறார் உமா.

உமா - பிரபாத் காதல் திருமணம் செய்து கொண்டவர்கள். இதற்கு மகிழ்ச்சியுடன் சம்மதமும் ஆசியும் வழங்கிய பிரபாத்தின் பெற்றோர் தமது மகனை 'அபகரிக்க' வந்தவள் என்று உமாவை என்றுமே எண்ணியதில்லை.

**வி**ஜயா - உமா போன்ற ஜோடிகள் அபூர்வமாகத்தான் அமைகிறார்கள்.

★ சாந்தி, பாங்க் வேலையில் இருக்கிறார். சில ஆயிரங்கள் சம்பளம் வாங்குகிறார். ஆனால் இவருக்குத் தாமே ஒரு புடைவை தேர்ந்தெடுத்து வாங்கிக் கொள்ளும் உரிமை கூடக் கிடையாது! இவர் வீட்டுப் பெண்கள் அனைவரது உள்ளாடைகளைக் கூட மாமியார்தான் தேர்ந்தெடுத்து வாங்குகிறார்! சாந்தியும் மற்ற மருமகள்களும் மனத்துக்குள் குமைவதோடு சரி...

# உறவின் மனோதத்துவம்

மங்களம் தம் மருமகள் கல்யாணச் சீராக வெள்ளிக் குடம் கொண்டு வரவில்லை என்பதை நாள் தவறாமல் கட்டிக் காட்டுகிறார். மருமகள் உஷாவோ, 'மாமியார் எனக்கு ஒரு தங்கத் திருகாணி கூட போடவில்லையே...!' என்று பதிலடி கொடுக்கிறார். வார்த்தைகள் தடித்தால் மாமியாரோ மருமகளோ வீட்டை விட்டு வெளிநடப்பு செய்வது இங்கே சகஜமாக நடக்கிறது...

**ஆ**க, ஸ்டவ்வை வெடிக்க வைத்து மருமகளைக் கொலை செய்யத் துணியும் அபூர்வ அசுரத்தனங்கள் ஒரு பக்கம் இருக்க, அன்றாட நடப்புகளாக இருப்பவை

மாமியார் - மருமகள் வெளிப்படையாகச் சண்டை போடுவதும்

மாமியார் - மருமகள் மனத்துக்குள் குமைவதும்.



★ உமா



❝ திரி ஸ்டவ்வைத் தண்ணீர் ஊற்றிக் கழுவவில்லை என்று என் மாமியாருக்கு ரொம்பக் குறை... என் நாத்தனார், அப்படித்தான் கழுவுவாராம்! ❞

★ உமா பிரபாத், விஜயா பாலகிருஷ்ணன் மற்றும் டாக்டர் பெயர்கள் தவிர மற்ற பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன.




மனோதத்துவ ரீதியாக இப் பிரச்னையை அணுகித் தீர்க்க வேண்டுமானால் முதல் கட்டமாக மாமியார் - மருமகள் இருவருமே அத்தகைய தீர்வை விரும்ப வேண்டும்.

''பிரச்னையே துளிர்க்க விடாமல், சுமுகமாக இருப்பது என்று இருவரில் ஒருவர் முடிவு செய்துட்டா கூடப் போதும்... அந்த முடிவு அவங்க செயல்ல மனப்பூர்வமா வெளிப்படும்... அதை அடுத்த நபரும் உணர்ந்து ஒத்துழைக்கத் தொடங்குவாங்க... பெரும்பாலும் 'நாம ஏன் முதல் அடியை எடுத்து வைக்கணும்?'ங்கற ஈகோவினாலேதான் அனாவசியமா மனக்கிலேசம் உருவாகி வளர்ந்துட்டே போகுது...'' என்கிறார் டாக்டர் மல்லிகா... இவர் மனோதத்துவ நிபுணர்.

''உதாரணமாக, மருமகள் லேட்டாக ஆபீஸிலிருந்து வருகிறாள். மாமியாருக்குக் கோபம். லேட் ஆனதற்கான காரணத்தை இவரும் கேட்பதில்லை அவரும் சொல்வதில்லை. இறுக்கமான மௌனத்தில் ஒரு பனிப் போர் ஆரம்பிக்கும்... லேட் ஆகும் போலிருந்தால் முன்கூட்டியே போன் செய்து சொல்லி விடலாம் - அந்த வசதி இல்லையெனில் வந்ததுமே லேட்டான காரணத்தைச் சொல்லி, 'கவலைப்பட்டுட்டீங்களோ?' என்று கேட்கலாம். அல்லது மாமியாரும் குற்றம்சாட்டுவது போலவல்லாமல் பரிவுடன் காரணத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்...''

இதுபோன்ற விஷயங்களில் முதல் அடி எடுத்து வைப்பது இளையதலைமுறையினருக்குத்தான் சுலபம் என்பது டாக்டர் மல்லிகாவின் கருத்து. ''ஒரு வயசுக்கு மேல வளைஞ்சு கொடுத்து அட்ஜஸ்ட் செய்து கொள்வது என்பது ரொம்ப கஷ்டம்...'' என்கிறார்.

''உண்மைதான். ஆனால் வளைந்து கொடுத்து அட்ஜஸ்ட் செய்து கொள்ளும் மருமகள்களின் கதி தொடர்ந்து அதுவேதான்! நிமிரவே முடியாது போகிறது! அவளுடைய உணர்வுகள் மதிக்கப்படுவது எப்போது...?'' என்பது தாம்பரம்வாசியின் வாதம்.

இந்த வாதத்துக்கும் பதில் இருக்கிறது டாக்டர் மல்லிகாவிடம்.

''நம் சமூக அமைப்பில் கல்யாணம் என்னும் போது பணம், காசு சேர்த்துத் தயார் செய்வது போல் சம்பந்தப்பட்டவர்கள் மனங்களைத் தயார்ப்படுத்திக் கொள்வதில்லை.

''எப்படித்தான் மாமியார்கிட்டே பேரெடுக்கப் போறியோ?'' போன்ற அங்கலாய்ப்புகள் கல்யாண வயதை நெருங்கும் பெண்களின் மனத்தில் மாமியார் பற்றிய ஒரு பயங்கர இமேஜை உருவாக்கி விடுகின்றன.

''மாமியார்களும் 'தங்கள் வேலைகளைப் பகிர்ந்து கொள்ள ஒருத்தி வருகிறாள்' என்றே நினைக்கிறார்கள். வரப் போகும் பெண் வாழ்நாள் முழுவதையும் இனி நம்முடன் கழிக்கப் போகிறாள்; இது நாள் வரை மகனுக்கு நாம் செய்தவற்றையும் அதற்கும் அதிகமாகவும் செய்யப் போகிறாள்' என்ற எண்ணம் மாமியாராகப் போகிறவருக்கு ஏற்பட வேண்டும். இதைப் பற்றி யோசித்தால் அப் பெண்ணிடம் அன்பும், அனுதாபமும் பரிவும் பாசமும் உண்டாகும். மாறாக என் மாமியார் இருந்ததைப் போல் தோரணையுடன் நானும் இருப்பேன் என்று இருந்தால் பிரச்னைதான். இப்படிப்பட்டவர்களால் மருமகளின் சின்னச் சின்ன வித்தியாசமான பழக்க வழக்கங்களைக் கூட ஏற்க முடியாமல் போகிறது.''

இந்த நிலைமையைத்தான் பாலா மூர்த்தியின் வீட்டில் பார்க்கிறோம். ''நான் திரி ஸ்டவ்வைத் தண்ணீர் ஊற்றிக் கழுவவில்லை என்று என் மாமியாருக்கு ரொம்பக் குறை... என் நாத்தனார், அப்படித்தான் கழுவுவாராம்! ஸ்டவ் வீணாகி விடுமே... என்றால் கேட்டால்தானே...?'' என்று புலம்புகிறார் பாலா மூர்த்தி.

ஆனாலும் பாலா சமாளிக்கிறார்.







''சின்ன விஷயங்களைக் கூட கேட்டுக் கேட்டுச் செய்து விடுவேன். ஆபீஸ் வேலைகள் பற்றியும் நண்பர்கள், தோழிகள் பற்றியும் மாமியாரிடம் விவரமாகப் பேசுவேன்... இதனால் ஒரு தோழமை உணர்வு ஏற்படுகிறது'' என்று சொல்கிறார்...

''**பெ**ண்கள் அதிகமாக வேலைக்குப் போகும் இந்தக் காலத்தில் மாமியார்களை உபயோகப் பொருளாக நினைத்துக் கொள்ளுவது அதிகரித்து வருகிறது...'' என்று எச்சரிக்கிறார் டாக்டர் மல்லிகா.

இதை உணர்ந்துள்ள சில மாமியார்கள் மருமகள்களிடமிருந்து ஒதுங்கியே இருப்பதும் உண்டு. ''என் மாமியார் எங்கள் குடும்ப விஷயத்தில் தலையிடுவதில்லை; எங்கள் பிரச்னைகளிலும் உதவுவதில்லை...'' என்று அங்கலாய்க்கிறார் கமலா. இவர் குழந்தை பிறந்த போது தனியாக அவஸ்தைபட்டு வேலைக்குப் போவதே பெரிய பிரச்னையாகி விட்டதாம்.

இதற்கு நேர்மாறாக, வேலைக்குப் போகும் பெண்கள், 'வீட்டுப் பொறுப்பை நாம் போதுமான அளவு பகிர்ந்து கொள்ளவில்லையோ' என்ற குற்ற உணர்வு காரணமாக எல்லா வேலைகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு திண்டாடிப் போவதும் உண்டு. ''இப்படிச் செய்து பழக்கி விட்டால், நாம் பார்த்துக் கொள்வோம் என்கிற அசிரத்தையில் மற்றவர்கள் எதையுமே செய்வதில்லை. ஆபீஸிலிருந்து திரும்பி காப்பி டம்ளர் கழுவுவது முதல் எல்லா வேலைகளையும் நாமே செய்ய வேண்டியிருக்கிறது...'' என்று வருத்தப்படுகிறார் மருமகள் சாந்தி.

''வீட்டு நிர்வாகத்தைப் பொறுத்த மட்டில் வேலைகளை எண்ணிக்கை அளவில் பிரித்து விட முடியாது - எடை போட்டுப் பார்க்க வேண்டும்...'' என்பது ருக்மிணியின் வாதம். ''டம்ளர் கழுவுவதும் துணி மடிப்பதும் மட்டுமேதான் வேலைகளா... யோசித்து யோசித்து பட்ஜெட் போட்டு, சாமான்கள் வாங்கி, என்ன சமைப்பது என்று முடிவெடுத்து... இதெல்லாம் மாமியார்கள் பார்த்துப் பார்த்துச் செய்கிறார்களே...''

**டா**க்டர் மல்லிகா முன் வைக்கும் யோசனை : ''வீட்டு நிர்வாகமானாலும் சரி, வேறு விஷயங்களானாலும் சரி மனம் விட்டுப் பேசி விட வேண்டும். 'நான் இதைச் செய்கிறேன், நீ இதை இதைச் செய்து விடு' என்று மிகச் சுலபமாகப் பகிர்ந்து கொள்ளலாம். சில நாள் சென்று ஒரு மாறுதலுக்காக பொறுப்புகளை இடம் மாற்றிக் கொள்ளலாம். எந்த உறவுமே மனம் விட்டுப் பேசுவதால் வலுப்படும்.''

மாமியார் - மருமகள் என்று வரும் போது இப்படி ஞாபகம் வைத்துக் கொண்டு செயல்படலாம் :

● மருமகள் பொதுவாக நல்ல பெயர் எடுக்கவே ஆசைப்படுவாள்.

● மாமியார் இலேசான சந்தேகத்துடன்தான் இந்த உறவை அணுகுவார்.

● மருமகள் பேசாமலே இருந்தால் மாமியாரின் சந்தேகம் வலுப்படும்.

● மாமியார் பணம் பொருள் போன்றவற்றை ஓர் உரிமையோடு தட்டிக் கேட்கும் போது உண்டாகும் மனக் கசப்பு இலேசில் மாறாது.

● மாமியார் வெறும் மிரட்டும் சமாசாரம் அல்ல. என் கணவனைப் பெற்று வளர்த்து ஆளாக்கிய தாய். அதன் பொருட்டு மரபு ரீதியான சில எதிர்பார்ப்புகள் அவளுக்கு உண்டு.

இவற்றையெல்லாம் நினைவு வைத்துக் கொள்வதுடன், அன்றாட சமையல், சாப்பாடு, வீட்டு நிர்வாகத்துக்கு அப்பாற்பட்ட ஒரு கலையிலோ கைத் தொழிலிலோ இருவருமே ஈடுபாடு கொண்டிருந்தால் அது மா-ம நெருங்கி வர மிக்க உதவிகரமாய் இருக்கும். இதற்கு அட்டைப்பட ஜோடியே சாட்சி.

– கலா மூர்த்தி

அட்டை வண்ணப்படம், படங்கள் :
கோபிநாத்

# பூக்களைப் பறிக்காதே என்றால் செடிகளையே பிடுங்குவதா...?

இந்த பூமி -
சூரிய குடும்பத்தின் உயிருள்ள வாரிசு!
முதல் உயிருக்கு
உயிர்தந்த அன்னை!

மனிதன்
பரிணாமப் பாடம் பயின்ற
பள்ளிக்கூடம்

அருகம் புல்லும், அரசமரமும்
அமீபாவும், ஆதாம் குலமும்
எல்லோரும்தான் இவளின் பிள்ளைகள்

இங்கே ஜனத்தொகை
பெருக்கி விட்டோம்!
வனத்தொகை குறைத்து விட்டோம்!

தாவரம் -
உயிர் வாயுவின் உற்பத்திக் கேந்திரம்!
அன்று ஆதிமனிதனுக்கு நெருப்பைக்கூட
அறிமுகம் செய்தது
காட்டில் உரசிக் கொண்ட
மரங்கள் தானே!

மண்ணோடு வேர் உறவுகொண்டு
நீங்காது நிற்பவை மரங்கள்.
உண்மையில் அவைதான்
மண்ணின் மைந்தர்கள்!

இங்கே - நிலத்தோடு மனிதன்
ஒட்டியிருப்பதே
இவன்மீது பூமி கொண்ட
ஈர்ப்பு விசையென்னும்
பாசப் பசைதானே!

பூக்களைப் பறிக்காதீர்கள்
என்ற பலகை பார்த்து
சரி, செடியையே பறிப்போம்
என்பவருமுண்டு இங்கே!

வருண பகவானுக்கே
தொண்டை வரண்டு போனதாம்!
மரங்கள் மாண்டதால்
மேகங்கள் முகம் வெளிறி
வேலை நிறுத்தம் செய்கின்றன!

இனி சூல் கொள்வதில்லை
என்று அவை சூளுரைத்து விட்டன!

ஒருபுறம் மரங்கள்
மரண ஓலமிடுகின்றன
மறுபுறம் - காற்று
கரும்புகையில்
மூச்சுத் திணறி மூர்ச்சையாகிக்
கொண்டிருக்கிறது.

ஆலைகளும், ஊர்திகளும்
காற்றுக்கு விஷமேற்றும்
வேலை செய்கின்றன!
ஓசோன் படலத்தில்
ஓட்டை போடுகின்றன!

விஞ்ஞானம் நமக்கு
வெளிச்சம் தந்தது.
பூமிக்கு வெப்பம் தந்தது.

இரண்டு நூற்றாண்டு
அறிவியல் அனலில்
இயற்கை கருகி வருகின்றது!

பூமியில் மூன்று பங்கு நீர்
ஒரு பங்கு நிலம்
அதில் முதலில் விழுந்த குப்பை
மனிதன்!
இங்கே வாழ்வதால்
இன்னும் குப்பை கொட்டிக்
கொண்டிருக்கிறான்!

நம் நகரங்கள்
நரகங்களின் நகல்களாகி விட்டன!
வீடு விட்டு வெளிவந்தால்
வீதியெல்லாம் குப்பை!
புதிய படம் என்றால்
திரையரங்கில் குப்பை!

காற்று வாங்கப் போனால்
கடற்கரையே குப்பை!
பேருந்து நிலையத்தில் தீராத குப்பை!
திருவிழா வந்தால் - கோவிலிலே
குப்பை!



# அம்ஜத் பாரதி

ஆடி பதினெட்டில்
ஆறெல்லாம் குப்பை!
கோடை வந்தால்
கொடைக்கானல் குப்பை!
மாநாடு நடந்தால்
மாநகரே குப்பை!

அப்பப்பா - இங்கே
அதிகம் திறந்திருந்தால்
வாயில் கூட விழும் குப்பை!

நகரத்தை மட்டுமா
நஞ்சாக்கி வைத்தோம்?

நாகரிகம் சொல்லிக் கொடுத்த
நதிக் கரையையும்
கறைப்படுத்தி விட்டோம்!
அதற்கு அழுக்கைத்தான்
அன்பளிப்பாய்த் தந்தோம்!

கங்கா சோப்பில்
மேனி குளித்தோமே
கங்கையைக் கழுவ
சோப்பு உண்டா இங்கே?
அந்த நதி - நகரும் மயானமாய்
மாறிப் போனதே!

காஷ்மீர் ஏரி
கழிவுகளின் களஞ்சியமாகி
விட்டதே!
கடலையும் கூட நாம்
கைவிட்டு விடவில்லை!

வளைகுடாப் போர்களில்
கடல் எத்தனை முறை
எண்ணெய் தேய்த்துத்
தீக்குளித்தது!

இது போதாதென்று
வல்லரசுகள் எல்லாம்
நட்சத்திரப் போருக்கு
நாள் குறித்துக் கொண்டிருக்கின்றன!

இருக்கும் கிரகத்தைக்
குலைத்து விட்டு
இன்னொரு கிரகம் தேடிப்
பறக்கிறது விஞ்ஞானம்!

நாம் அன்றி நிற்கும்
உலகப் பந்தை
உதைத்து ஆடிய
விளையாட்டுகள் போதும்!

இதுவரை உங்களுக்குக்
காசு சேர்த்தீர்கள்
பூமிக்கு மாசுதானே சேர்த்தீர்கள்!
இனியேனும்

சுற்றமும், நட்பும்
பேணுவதைப் போல்
சுற்றுப்புறம் பேணுவோம்!

ஆரோக்கியத்திற்கு ஆதாரம்
சுகாதாரம் என்றறிவோம்!
மாதா பிதா என்று
பூமிக்கும் வானத்துக்கும்
மரியாதை செய்வோம்!

வீட்டை நேசியுங்கள்
அது உங்கள் உரிமை!
நாட்டை நேசியுங்கள்
அது உங்கள் கடமை
இவற்றுக்கும் மேல்
இயற்கையைப் பூஜியுங்கள்
அது உங்கள் பிறவிக்கே
பெருமை!

(திண்டுக்கல்லில் நடந்த உலகச்
சுற்றுச்சூழல் தினத்தில் வாசிக்கப்பட்
கவிதை)



# கல்கி



1993
ஜூலை 18
மலர் : 51
இதழ் : 51
ஸ்ரீமுக
ஆடி 2

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## ஊழலை மறைக்க ஊழல்கள்!

ஹர்ஷத் மேத்தாவை நாடாளுமன்ற கூட்டுக் குழு விசாரித்த பிறகு அக் குழுவின் தலைவர் மிர்தா ஒரு ஆச்சர்யமான அறிக்கை விட்டிருக்கிறார். அதன்படி ஹர்ஷத் புதிதாக எந்த ஒரு சாட்சியமும் முன்வைக்கவில்லை என்பதோடு, பதினைந்து தடவை முன்னுக்குப் பின் முரணாகப் பேசியிருக்கிறார்! இவர் விசாரணை நடத்தினாரா அல்லது முரண்பாடுகளை எண்ணிக் கொண்டிருந்தாரா என்ற கேள்வி ஒருபுறமிருக்க, ஏற்கெனவே முன்வைக்கப்பட்டுள்ள சாட்சியங்கள் மெய்யா பொய்யா என்பதை உரைத்துப் பார்க்க மிர்தா விசாரணையைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். மாறாக ஹர்ஷத்தின் வாக்குமூலங்களையும் சாட்சியங்களையும் அலட்சியப்படுத்திப் பேசுவது நா.ம.கூ.குழுவுக்கு உண்மையைக் கண்டறியும் ஆர்வம் உள்ளதா என்ற சந்தேகத்தையே எழுப்பும்.

மிர்தாவின் அறிக்கைக்குப் பதில் அறிக்கை கொடுத்துள்ள ஹர்ஷத் மேத்தா, இந்த ஒரு கோடி ரூபாய் ஊழல் குற்றச்சாட்டில் தாம் இதுவரை சமர்ப்பித்துள்ள சாட்சியங்களையெல்லாம் மறுபடி பட்டியலிட்டிருக்கிறார். அதற்கு மேலும் சிலவற்றைக் கூறியுள்ளார். எல்லாவற்றையும் ஒட்டுமொத்தமாகப் பார்க்கும் போது முக்கியமாக நம் கவனத்தைக் கவர்கின்ற விஷயங்கள் :

கவில் மிட்டலுடன் நடந்த டெலிஃபோன் பேச்சு ஒலி நாடா "திருத்தப்பட்டுள்ளது" என்று மிட்டல் கூறிய போதிலும் இத்தகைய ஃபோன் பேச்சு நடக்கவே இல்லை என்று அவர் கூறவில்லை.

கவிலும் அவர் தகப்பனார் சத்பால் மிட்டலும் காங்கிரஸ் கட்சிக்கு நிதி சேகரித்து அளிப்பதில் நெடுங்காலமாகவே ஈடுபட்டு வந்துள்ளனர். இந்திரா காந்தி ராஜீவ் காந்தி காலத்திலிருந்தே நெருக்கம்.

பிரதமர் இல்லத்துக்கு வருகை தருவோர் பற்றிய குறிப்பேடுகள் தீ வைத்து அழிக்கப்பட்டு விட்டதாக பிரணாப் முகர்ஜி கூறியது அதிர்ச்சி அளிப்பதாகும். உலகின் எந்த நாட்டிலும் பிரதமர் இல்லத்தின் வருகைப் பதிவேடுகள் இந்தக் கதியை அடைவதில்லை.

பிரதமரை ஹர்ஷத் மேத்தா சந்தித்ததாகக் கூறப்படும் தேதிக்குப் பிறகுதான் நந்தியால் தேர்தல் நடைபெற்றது என்பதும் அங்கு பணம் வாரி இறைக்கப்பட்டது என்பதும் அனைவரும் அறிந்த உண்மை.

பிரதமர் ஒவ்வொரு நாளும் யார் யாரைச் சந்தித்தார் என்பதற்கான "என்கேஜ்மெண்ட்ஸ்" பதிவேட்டில் குறிப்பிட்ட தினத்தில் ஜக்மோகன் பெயர் காணப்படுகிறது. ஆனால் நாம் அனைவரும் அறிந்த ஜக்மோகன் அன்று பிரதமரைத் தாம் சந்திக்க நேரம் கேட்கவும் இல்லை சந்திக்கவும் இல்லை என்று கூறி விட்டார்.

குறிப்பிட்ட நவம்பர் 4ம் காலை நிமிஷத்துக்கு நிமிஷம் பிரதமர் என்ன செய்து கொண்டிருந்தார் என்பதை நிரூபிக்க முடியாமல் "இடைவெளிகள்" இருக்கவே செய்கின்றன.

சி.பி.ஐ. தீவிரமாக விசாரணை நடத்த முடியாதவாறு அந்த இலாகாவுக்கு மேலிடத்துக் குறுக்கீடும் கட்டுப்பாடும் உள்ளது! 'பங்கு மார்க்கெட் ஊழலில் அரசியல் தலையீடு இல்லை' என்று கூற மறுத்துத்தான் மாதவன் ராஜினாமா செய்ய நேர்ந்துள்ளது.

நிலைமை இவ்வாறு இருக்க நா.ம.கூ. குழுவாவது உண்மையைக் கண்டறிய ஆர்வம் காட்ட வேண்டுமேயல்லாது பூசி மெழுக முற்பட்டால் இதுவும் ஒரு போஃபர்ஸ் விசாரணை ஆகி விடும்.

பிரதமருக்கு எதிராக உள்ள ஏராள சாட்சியங்களுக்கு மறுப்பாக, "நான் ஹர்ஷத் மேத்தாவை சந்தித்ததே இல்லை; ஹர்ஷத்தின் குற்றச்சாட்டுக்கள் கவனத்துக்குரியனவே அல்ல" என்பதற்கு அதிகமாகப் பிரதமரால் ஏதும் கூற முடியவில்லை.

"ஹர்ஷத் மேத்தா ஒரு கிரிமினல்; அவர் கூறுவதற்காகப் பிரதமர் ராஜினாமா செய்ய வேண்டுமா?" என்று கேட்டால் அதற்கு ஒரே பதில் : 'நரசிம்மராவ் அப்படியொன்றும் புத்த பகவான் இல்லை' என்பதுதான். நில உச்ச வரம்புச் சட்ட மீறல் முதல், 'கோல்[illegible]ஸ்டார்' விவகாரம் வரை பல ஊழல் குற்றச்சாட்டுக்களுக்கு ஏற்கெனவே அவரும் அவர் குடும்பத்தினரும் உள்ளாகியிருக்கின்றனர்.

வரப் போகிற மா[illegible]த் தேர்தல்களிலும் தொடர்ந்து வரக்கூடிய நாடாளுமன்றத் தேர்த[illegible] தலைகுனியாமல் வேட்பாளர்களை நேருக்கு நேர் சந்திக்க வே[illegible]ரசிம்மராவைக் கழற்றி விட்டு விட்டு ஜனநாயக முறைப்படி நா[illegible]ங்கிரஸ் கட்சி வேறு ஒரு தலைவரைத் தேர்ந்தெடுப்பது ஒன்றுதா[illegible]

முள்ளம் பன்றியை [illegible] கொண்டு முயல் வேட்டை ஆட முடியாது!

# பாடுங்கள், பரவசமாக!

"பாடுவதா? நானா?" என்று தயங்காதீர்கள். தாராளமாகப் பாடுங்கள். மனம் இலேசாகும். ஆனந்தம் குடிகொள்ள கோப தாபங்கள் மறையும். பிரச்னைகள் இலேசாக, அவற்றைச் சமாளிக்க முடியும் என்ற நம்பிக்கை பிறக்கும்.

"போய் நிறுத்துய்யா" என்று யாராவது சொன்னால்...? "பறவைகள் பாடுகின்றன; மீன்கள் பாடுகின்றன, நான் ஏன் பாடக் கூடாது? நீங்களும் பாடுங்கள்" என்று சொல்லுங்கள்!

50 ஆண்டுகளுக்கு முன்பு வரை மீன்கள் பேசாத உயிரினங்கள் என்று தான் அறிவியல் அறிஞர்கள் கருதினர். இரண்டாவது உலகப் போர் நடந்த காலத்தில் ஜெர்மானிய கடற்படையின் யு-போட் என்னும் கப்பல்களைக் கண்டுபிடிக்க அமெரிக்கக் கடற்படை ஹைட்ரோபோன்ஸ் என்னும் கருவிகளைக் கடலில் இறக்கிய போது மர்மமான ஒலிகள் கேட்டன. பின்னர்தான் தெரிய வந்தது அது மீன்கள் எழுப்பும் ஓசையென்று!



## பாடும் மீன்கள்!

ஒலி எழுப்பும் மீன்களில் குறிப்பிடத்தக்கவை டாம்செல் மீன் (Damsel), காட் மீன் (Cod), ஹேடாக் மீன் (Haddock) ஆகியவை. டாம்செல் மீன் கவர்க்கோழி போல சப்தத்தை எழுப்புகிறது. பெண் மீன் இவ்வாறு பாடி ஆண் மீன்களைக் கவர்ந்திழுக்கிறது. ஹேடாக் மீன் எழுப்பும் ஒலி, மோட்டார் சைக்கிள் எழுப்பும் ஒலியை ஒத்திருக்குமாம்! இது அந்த மீனின் காதல் பாடல்! காட் மீனின் ஒலி முனகல் ஒலியைப் போல கேட்கும்.

## கோஷ்டி கானம்!

கடலின் மிகச் சிறந்த பாடகர்கள் திமிங்கலங்கள்தாம். அமெரிக்காவில் மாஸசூசெட்ஸ், லாங் டெர்ம் (Long Term) ஆய்வுக் கழகத்தைச் சேர்ந்த லின்டா வெளியும், நியூயார்க் கார்னெல் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த காதரின் பெய்னும் திமிங்கலப் பாடல்களைப் பதிவு செய்து ஆராய்ந்தனர். வட பசிபிக் பெருங்கடலில் 460 திமிங்கலங்களின் பாடல்களையும், அட்லாண்டிக் பெருங்கடலில் 88 திமிங்கலங்களின் பாடல்களையும் ஒலிப் பதிவுக் கருவியில் பதிவு செய்து கம்ப்யூட்டரில் கொடுக்கப்பட்டது. என்ன ஆச்சரியம்! அந்தப் பாடல்களில் தாள லயம் இருப்பதும் தெரிய வந்துள்ளது.

ஒரு அணியிலுள்ள திமிங்கலங்கள் அனைத்தும் ஒரே பாடலைப் பாடுவதும், காலப்போக்கில் அந்தப் பாடல் சிறிது சிறிதாக மாறி வருவதும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஆண் திமிங்கலங்கள் மட்டுமே பாடுகின்றன என்பது குறிப்பிட வேண்டிய விஷயம்.

## விசிலடிக்கும் பறவை!

இந்திய வானம்பாடி நன்கு பாடக்கூடியது. ஜாக்டாஸ் (Jackdaws), மேக்பை (Magpies), ஸ்டார்லிங்ஸ் (Starlings) போன்றவை கிளிகளைப் போல் பேசி, பாடவும் செய்யும்.

தென் அமெரிக்கா, ஆப்பிரிக்கா நாடுகளில் வாழும் மணிப் பறவை (Bell Bird) யின் பாட்டோசை அதிக தொலைவு கேட்கக் கூடியது! ஐரோப்பிய தேன் சிட்டுக்கள், ஆஸ்திரேலியா லயர் பறவை போன்றவையும் பாட்டொலி எழுப்புகின்றன.

இமாலயன் பார்பட், விசிலடிக்கும் பறவை போன்றவை இமய மலைப் பகுதியில் காணப்படும் சில விசித்திரமான பறவைகள். பார்பட் பறவை, நம்மைப் போலவே தனது குரலைத் தானே கேட்டு ரசிக்குமாம். விசிலடிக்கும் பறவையின் குரல் விசில் ஒலி போலவே இசையுடன் ஒலிக்கக்கூடியது.

- கிருஷ்ணா. முத்துராமலிங்கம்







## நில், கவனி, வெற்றி கொள்!

“ஷாக் அடிக்காது” என்று சவால் விட்டு மின்கம்பம் ஏறி, பன்னிரண்டாவது வயதில் வலது கரத்தைப் பறிகொடுத்த மாணிக்கத்தையும் அவரது தட்டு வண்டியையும் சிதம்பரத்தில் அறியாதவர் வெகு சிலரே. சிதம்பரம் நகரைச் சுற்றி முப்பது கிலோமீட்டர் தூர சுற்றளவுக்கு அவர் செல்லாத ஊரே இல்லை. அன்றாடம் தேவைப்படும் அரிசி, காய்கறி, மளிகைப் பொருட்களிலிருந்து கட்டில், பீரோ, மேஜை, நாற்காலி, கிரைண்டர், வாஷிங்மெஷின், நீர் இறைக்கும் இயந்திரங்கள், என அவர் ஏற்றிச் செல்லாத சுமையே இல்லை.

ஒற்றைக் கை மனிதரால் இதையெல்லாம் எப்படி செய்ய முடிகிறது?

“ரொம்ப கஷ்டந்தாங்க” என்கிறார் இன்று முப்பத்து மூன்று வயதான மாணிக்கம். மத்தவங்களோட கிண்டலும் கேலியுமான பேச்சு ஒருபக்கம், ஒத்த கையிலே எல்லாத்தையும் செஞ்சுக்க முடியாத தவிப்பு மறு பக்கம், இப்படியொரு வாழ்க்கை நமக்கு அவசியந்தானாங்கற வெறுப்பு மூன்றாவது பக்கம் ஒவ்வொரு நாளும் நிம்மதியில்லாத வாழ்க்கை. பல சமயங்களில் தற்கொலை பண்ணிக்கிடணும்னுகூட நினைக்கப்பேன். நல்லவேளையா அப்படியொரு முயற்சியிலே இறங்கலே. இப்படியே மூணு வருஷம் ஓடிச்சு. வெளிக் காயம் ஆறினது மாதிரி மனக் காயமும் ஆறிய பிறகுதான் உண்மையை ஒத்துக்கற பக்குவம் வந்திச்சு. நேத்தைவிட, நாளையைவிட இன்னிக்குன்றது நிஜம் - சத்திய சாசுவதமான நிஜம். அப்படின்னு முடிவுக்கு வந்தேன்.... அடுத்தது என்ன பண்ணலாம்னு யோசிச்சேன். முடிஞ்ச வேலைகளை செஞ்சேன். சைக்கிளில் லோடு அடிச்சேன். ஒத்த கையோட சைக்கிள் ஓட்டியதும் லோடு அடிச்சதும் எதையும் செய்ய முடி

**நேற்றையக் கதை;**
**நாளையக் கனவு;**
**இன்றைய நிஜம்!**

யுங்கற தைரியத்தைக் கொடுத்துச்சு. வேலை இல்லாத நாட்களில் கொள்ளிடக்கரையில் கிடைக்கும் விறகுகளைச் சேகரிச்சு வித்தேன். வருமானம் கொஞ்சமாகத்தான் கிடைச்சது. ஆனா வேலை செஞ்சதும் சைக்கிள் லோடு அடிச்சதும் மனசுக்குப் புதுத் தெம்பைக் கொடுத்தது. எதையும் செய்ய முடியுங்கற நம்பிக்கையை உண்டுபண்ணிச்சு. சுருக்கமா சொல்லணும்னா, சைக்கிள்தான் எனக்கு ஏற்பட்ட ஊனத்தை மறக்கக் காரணமா இருந்ததுன்னு சொல்லலாம்.''

**மா**ணிக்கத்தின் புதிய வாழ்க்கையால் தங்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைத் தெரிவிப்பதுபோல் அவரது பெற்றோர் சொந்த மாமன் மகளையே அவருக்குத் திருமணம் செய்து வைத்தார்கள். ஊனத்தை உணர்ந்த உறவுப் பெண்ணே மனைவியாக வந்ததில் மேலும் மகிழ்ச்சியுற்ற மாப்பிள்ளை மாணிக்கம், வேலைகளுக்குச் சென்று முன்னுக்கு வந்தார். என்றாலும்கூட போதிய வருமானம் கிடைக்கவில்லை. வறுமையை விரட்ட அவர் மேற்கொண்ட எல்லா முயற்சிகளும் தோல்வியுற்ற நிலையில் அவரது மனைவி தற்கொலை செய்து கொண்டுவிட, மாணிக்கம் இரண்டாவது தடவையாக அடிபட்டார். அனைவரிடமிருந்தும் விலகி வெகுதூரம் சென்றார்.

மனத்தில் பட்ட காயத்தை ஆற்றிக் கொள்ள மதுரை, திண்டுக்கல், பழனி, சென்னை என சைக்கிளிலேயே சுற்றினார். வழிச்செலவுக்குத் தேவையான பணத்தை சைக்கிள் வேடிக்கை காட்டியே சம்பாதித்தார். ஒரு நீண்ட பயணமும் பலதரப்பட்ட மக்களின் சந்திப்பும் மீண்டும் வாழ்க்கை போதையை ஊட்ட, ஊர் திரும்பினார்.



''இந்த காலத்துல எல்லாமே நாம நினைக்கிறதுக்குத் தலை கீழா மாறி நடக்குது போங்க.''

''எதை வச்சு அப்படிச் சொல்றீங்க?''

''12345 - ங்கிற நம்பருக்கு ஃபோன் பண்ணினா, 54321 - ங்கிற நம்பர் கிடைக்குதே!''

- சீர்காழி வி. ரேவதி.

நெருங்கிய நண்பரொருவர் கூறிய பத்திரிகைச் செய்தி பார்த்து, சென்னையிலுள்ள தனியாருக்குச் சொந்தமான செயற்கை உடலுறுப்புகள் தயாரிப்பு நிறுவனத்திற்கு சைக்கிளிலேயே சென்று தம் நிலையைக் கூறி இலவசமாகவே கரமொன்றைப் பொருத்திக் கொண்டார்.

தொடர்ந்து பலரது உதவிக்கரங்கள் நீள, புஷ்பம் என்ற பெண்ணை இரண்டாவது மனைவியாக்கிக் கொண்டார். இதைத் தொடர்ந்து உற்ற நண்பரொருவரின் முயற்சியாலும் கொள்ளிடம் ஊராட்சி ஒன்றிய அதிகாரிகளின் இரக்க மனப்பான்மையாலும் மதுரை வங்கி நிர்வாகத்தினர் தயவாலும் கடன்பெற்று, சொந்தமாகவே சைக்கிள் கடை வைத்தார். ஆனால் சிறிய பழுது நீக்குவதற்குக் கூட வேறொருவரின் துணை தேவைப்பட்டதால் சைக்கிள்களை விற்றுத் தட்டு வண்டியை வாங்கினார். ஆரம்பத்தில் காலால் மிதித்துச் சவாரிகளைப் பிடித்தார். (பார்க்க - படம்). பிறகு மனைவியின் முயற்சியில் கடன் பெற்று மோட்டார் வாங்கிப் பொருத்திக் கொண்டார்.

**மா**ணிக்கத்துக்குத் தொடர்ந்து வண்டிச்சவாரி கிடைக்காதது பெரும் பிரச்னையாக இருந்தாலும் கூட அவ்வப்போது கிடைக்கும் சவாரிமூலம் வரும் வருமானத்தை வைத்துக் கொண்டு பட்டினி கிடக்காமல் ஜீவனம் நடத்துகிறார். எந்த ஊருக்குச் சுமை ஏற்றிச் சென்றாலும் இவர் பிறரை உதவிக்குக் கூட்டிச் சென்றதில்லை. செல்லும் வழியில் வண்டி நின்று விட்டாலும் மோசடிப்பேர்வழிகள் எதிர் கொண்டாலும் திறமையுடன் சமாளிக்கிறார். தமக்குள்ள ஒரேயொரு குறை தம்மை மதித்து வங்கி வழங்கிய கடனைத் திருப்பிக் கட்டாததே என்கிறார். நாணயத்தையும் நேர்மையையும் பெரிதும் மதிக்கும் மாணிக்கத்துக்கு இது பெரிய உறுத்தல்.

''அன்னைக்கு 'மின் கம்பியிலே ஏறாதேன்னு' நண்பர்கள் எவ்வளவோ சொன்னாங்க, நான் கேட்டுக்கிடல! இப்போ உணர்ந்து பார்க்கிறேன். ஒருநாள் செஞ்ச தப்பை ஒவ்வொரு நாளும் உணர்ந்து பார்க்கறதாலே தப்புச் செய்யவே தோணமாட்டேங்குது... மனுஷ வாழ்க்கைங்கறது கடைசிவரை ஒரே மாதிரியா இருந்துடறதில்லை. காலத்துக்குக் காலம் மாறும். மாறாத போது நாம மாத்தணும்.'' சரளமாகத் தத்துவம் பேசுகிறார் மாணிக்கம்.

ஒரு மறக்க முடியாத சம்பவம் தந்த பாடம் படிப்பறிவே இல்லாத மாணிக்கத்தை நிறைய சிந்திக்கவும் செயல்படவும் செய்து கொண்டிருக்கிறது.

**- நெய்வாசல் நெடுஞ்செழியன்**

அது நகர்கிறது, அது நகர்வதில்லை.
அது தூரத்தில் இருக்கிறது, மற்றும் அருகே இருக்கிறது.
அது எல்லாவற்றின் உள்ளேயும் இருக்கிறது.
அது எல்லாவற்றின் வெளியேயும் இருக்கிறது.

- ஈசோபனிஷத்

ஜோ, அரசை ப்ளாக்மெயில் செய்யும்,

அத்யாயம் - **ஊ**

**ஊ**ளங்களுடன் சந்தோஷ நிலையம் எண் 5 பரபரத்தது.

''அந்த மனிதன் ஷிவ்லியை ஏன் தேர்ந்தெடுத்தான்?'' உளவதிகாரி கேட்டார்.

''அவன் கேட்ட அளவுகளில் கம்ப்யூட்டர்தான் ஷிவ்லியைத் தேர்ந்தெடுத்தது.''

''ஷிவ்லியை எப்போதிலிருந்து காணவில்லை?''

''அவன் ஒரு நாளைக்கு ரூ தந்திருந்தான். நேற்று காலை அவளைக் காணவில்லை. வீட்டிற்குப் போயிருப்பாள் என்று நினைத்தோம். ஆனால் அவள் கணவனிடம் இருந்து போன் வந்தது.''

''அவள் இங்கிருந்து போனதற்கு சாட்சி ஏதும் உண்டா?''

''இல்லை போவதற்கு முன் கம்ப்யூட்டரில் பதிவு செய்துவிட்டுப் போக வேண்டும். அன்று ஷிவ்லி பதிவாகவில்லை. அதன்படி அவள் இங்கிருந்து போகவில்லை.''

''கம்ப்யூட்டர் தவறியிருக்கலாம்.''

''இது தப்பே செய்ததில்லை.''

''இங்கிருந்து போகவில்லையெனில் என்ன ஆனாள்?''

''அதுதான் மர்மமாகவுள்ளது.''

''ஷிவ்லியின் அனுமதி அட்டை பார்க்கலாமா?''

''தாராளமாக.''

அனுமதி - C பிரிவு. எண் X1010
நிறம் : மாநிறம்
அளவு : 38-25-35
உயரம் : 5 அடி
முடியின் நிறம் : கறுப்பு
நேரம் : ஒரு நாள்
அலுவலக உபயோகம்
அனுமதி - ஷிவ்லி

''ஷிவ்லிக்கு விரோதிகள் யாராவது உண்டா?''

''கிடையாது. மிக நல்ல பெண். கணவனையும் குழந்தையையும் காப்பாற்றி வந்தாள்.''

''ஷிவ்லியை யாராவது அன்று பார்த்தார்களா?''

''பொதுவாக எல்லாரும் அதிகபட்சம் ஒரு மணி நேரம்தான் தங்குவார்கள். அன்று வந்தவன் மட்டும் ஒரு நாள் தங்க ரூ தந்திருந்தான். எல்லாருமே அவனை வித்தியாசமாகப் பார்த்தோம். ஆனால் இரவே அவன் மட்டும் போய் விட்டான்.''

''தனியாகத்தானே போனான்?''

''ஆம். தனியாகத்தான். வெளியே அழைத்துப் போகத் தனி அனுமதி பெற வேண்டுமே...''

''எனில், ஷிவ்லிக்கு இங்கேயே ஏதோ நிகழ்ந்துள்ளது... சரிதானே?''

''அப்படித்தான் தோன்றுகிறது.''

''யாராவது கொன்றிருந்தால்...?''

''இருக்காது... அப்படிக் கொடிய மனம் கொண்டவர்கள் கிடையாது. கொன்றிருந்தால் உடலை மறைக்க வழியுமில்லை.''

''ஒரு சாத்தியம்தான். ஓ.கே. அந்த அனுமதி அட்டையைத் தருகிறீர்களா? அதில் அந்த மனிதன் ரேகை இருக்கும். அவனைப் பிடித்தால் தெளிவாகலாம்.''



**எச்சரிக்கை!**

ஆறே வாரங்கள், பூமி வாழ்க்கை!
அதற்குள் மிஸ்டர் வஸந்த், லட்சியப் படத்தை முடித்து விடு!

# ஆத்மாவுக்கு ஆபத்து

''தாராளமாக. வேறு என்ன உதவி வேணாலும் தருகிறோம். ஷிவ்லியை முதலில் கண்டுபிடியுங்கள். அந்த பயத்தில் மற்ற பெண்களும் மறுக்கிறார்கள்.''

''இது ஆத்மா காலம். யாரும் தப்ப முடியாது.''

உளவதிகாரி அனுமதியட்டையைக் கை ரேகை கம்ப்யூட்டருக்கு அனுப்பி விட்டு, ஷிவ்லி கணவன் மிதுனைச் சந்தித்தார். மிதுன் தாடியால் முகத்துக்குச் சோகப் போர்வை போர்த்தியிருந்தான். பார்வையை வெறிக்க விட்டிருந்தான்.

''மிஸ்டர் மிதுன்...?''

''யெஸ் நான்தான்.''

''ஷிவ்லி?''

''என் மனைவி. சோறு போடும் எந்திரம்.'' பார்வை நிலைத்திருந்தது.

''அவள் எங்கு போயிருப்பாள் என்று யூகிக்க முடிகிறதா?''

''உடலால் எங்கு போனாலும் மனத்தளவில் என்னிடத்தில்தான் இருக்கிறாள்'' - மிதுன் பார்வை விலகாமல் தீர்க்கமாய்ப் பேசினான்.

''உங்களுக்கு யாராவது விரோதிகள் உண்டா?''

''உண்டு.''

''ஒருவேளை உங்களைப் பழிவாங்க அவன் ஷிவ்லியை மறைத்திருக்கலாம். யார் அது?''

''என் விரோதி ஜென்மப் பகைவன் கம்ப்யூட்டர்.''

''யூ மீன் ஆத்மா?''

''யெஸ். ஆத்மா த ஹெல்!''

''நோ. ஆத்மா கடவுள் மாதிரி. எங்கள் வேலையை 90% குறைத்து விட்ட கடவுள். இன்றைய தேதியில் கொலையாளி, திருடன் யாரும் தப்ப முடியாது. ரேகை வைத்து அட்ரஸ் சொல்கிறது. அதோடு ஏன் சார் கோபம்?''

''என் வேலையைப் பறித்த துரோகி. என் அழகிய இளம் மனைவி சந்தோஷ நிலையம் போகக் காரணமாக இருந்த ராட்சதன். அவள் மறைவுக்குக் கூட ஆத்மாதான் காரணமாக இருக்கலாம்.''

''விரக்தியால் பேசுகிறீர்கள் மதன். கம்ப்யூட்டரால் வேலையிழந்த உங்களுக்கெல்லாம் ஓய்வில்லத்தில் இடம் உண்டே. ஜாலியாகப் பொழுதைக் கழிக்கலாமே.''

''வாயை மூடு...! ஆத்மாவின் அடிவருடியே!''

''அமைதி, ரிலாக்ஸ்! ஆத்மாவிடம் இவ்வளவு கோபம் காட்டுகிறீர்களே? அதுதான் ஷிவ்லியைக் கண்டுபிடிக்கப் போகிறது.''

நளினி சாஸ்திரி



''எனக்கு மனைவியும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம். கெட் அவுட்!''

''மிஸ்டர் மிதுன்...''

''ஆத்மா துதிபாடும் நாயே வெளியே போடா!''

**அ**தற்குள் கை ரேகை முடிவுகள் வந்திருந்தன. அந்த அடையாள அனுமதி அட்டையில் இருந்த ரேகை :

> *01X ரேகை*
> *பிறப்பு எண் : தெரியவில்லை*
> *பெயர் : தெரியவில்லை*
> *முகவரி : தெரியவில்லை.*

அதிர்ந்தார் அதிகாரி. ஆத்மாவுக்கே




தெரியாத ஆளா? அது எப்படிச் சாத்தியம்? எப்படி ஒருவன் இதிலிருந்து மீள முடியும். உடனே அவர் உளவுத் துறை உயர் அதிகாரியை வி.வியில் அழைத்தார். வி.வி. திரையின் பாஸ்பரில் உயரதிகாரி ஒளிர்ந்தார்.

''டெலினி, மற்றும் மத்திய கை ரேகை கம்ப்யூட்டர் வந்ததிலிருந்து நாட்டில் குற்றங்கள் மிக அரிதாகி விட்டன. பொது மக்கள் தீர்ப்பு தரும் பயத்தில் திருட்டு கூட நடப்பதில்லை. ஆனால், தற்போது விசித்திர வழக்கு ஒன்று வந்துள்ளது. ஷிவ்லி என்ற சந்தோஷ நிலையப் பெண் தடயமின்றிக் காணவில்லை. அவளுடன் இருந்த மனிதன் கைரேகையோ நம் மத்திய கம்ப்யூட்டரில் இல்லை. எப்படித் தொடர்வது?''

''கவனிக்க. இதே போல் நேற்று ஒரு கேஸ் ZEL நகரில் பதிவாகியுள்ளது. ஓர் ஆராய்ச்சி மாணவி திடீரென மறைந்து விட்டாள். அங்கும் முகவரி இல்லாத, பிறப்பெண் இல்லாத ரேகை ஒன்று கிடைத்துள்ளது.''

''...என்றால், அவன்தான் காரணம். மேலும் ஷிவ்லியின் அறைச் சுவரில் ஜூலா அழைக்கிறாள் - ஆத்மாவுக்கு ஆபத்து என்ற கிறுக்கப்பட்ட குறிப்பு கிடைத்துள்ளது. இதற்கும் மறைவுக்கும் சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை.''

''அப்படியா...? சோட்டி மறைவிலும் முதல் வாசகம் மட்டும் கிடைத்துள்ளது.''

''எனில் திட்டமிட்ட கொலை அல்லது கடத்தல் அல்லது...''

''நேற்று ZELல் மறைவு. இன்று NEMல். 1000 கி.மீ. வித்தியாசம். குற்றவாளி ஓடிக் கொண்டிருக்கிறான். அல்லது ஒரு கூட்டம் செயல்படுகிறது. தொடர்வானா அல்லது தொடர்வார்களா?''

''எதற்கும் விஷயத்தை மக்களுக்குத் தெரிவித்து எச்சரிப்பது நல்லது. பத்திரமானது. நம் கடமை.''

''அதை ஆத்மா நிர்மானிக்கட்டும்.''

''ஒருவேளை கொலை செய்திருப்பானோ?''

''அப்ப உடல் எங்கே போகும். இருந்திருந்தா நம்ப ஃப்ரிமோன் அனலைஸர் மோப்பம் பிடிச்சிருக்குமே!''

''கொன்னு தின்னிருப்பானோ?''

''அப்ப கீழே இரத்தம் எலும்பு கூடவா சிந்தியிருக்காது? நாமே இப்படி விபரீதமா நினைக்கக் கூடாது.''

**உ**லகம் பூராவும் வி.வி. எச்சரித்தது. 'முகவரி இல்லாத ஒருவன் இரண்டு பிரஜைகளின் மறைவுக்குக் காரணமாயிருக்கிறான். வித்தியாசமாக, உயரமாக யாரையாவது பார்த்தால் உளவுப் பிரிவுக்குத் தகவல் தர வேண்டியது உலகப் பிரஜைகளின் கடமை. பயம் தேவையில்லை.'

- வி.வி.யில் எச்சரிக்கை கேட்ட ஜோ அதிர்ந்தான். அவன்தான். அவனேதான். உணவளித்த கடவுள். கடவுள் விபரீதமானவனா? இல்லை நல்லவன். இருந்தாலும் விபரீ... ஒரு முடிவுக்கு வந்த ஜோ உளவுப் பிரிவுடன் தொடர்பு கொண்டான்.

''ஹல்லோ நான் ஜோ. எண் Z1011101''

''சொல்லுங்கள் உதவக் காத்திருக்கிறோம்.''

''ஹ... ஹஹ்ஹஹ்ஹா! உங்களுக்கு உதவக்கூடிய செய்தி என்னிடம் உள்ளது. அந்த மனிதன் பற்றின விவரங்கள்...''

''எந்த மனிதன்? மறைவுக்குக் காரணமானவனா?''

''முகவரி இல்லாத மனிதன். என்னுடன் சிறிது நேரம் கழித்தவன்.''

''அப்படியா! விவரமாகச் சொல். விரைவாகச் சொல்.''

''சாரி! அந்தச் செய்தியின் முக்யத்துவம் புரிந்து பேசுகிறேன். அதற்கு விலை வேண்டும்.''

''ஆத்மாவுடன் விளையாடுகிறாய். தேசத் துரோகம். தண்டனை தெரியுமா?''

''பொது மக்கள் தீர்ப்புக்கும் தயார் தான். கேட்கும் விலை வேண்டும். இல்லாவிட்டால் பரவாயில்லை மௌனமாயிருந்து பழக்கமுண்டு.''

''ஜோ விளையாடாதே!''

''விளையாட்டில்லை... இது என் வாழ்க்கைப் பிரச்னை.''

''என்ன விலை?''

''பிறகு மாறக் கூடாது!''

''சத்யம். அரசு மூலமில்லா விட்டாலும், தனிப்பட்ட முறையில் உனக்கு விலை தர்றேன்.''

''எனக்கு ஒரு வேலை வேண்டும்.''

''வேலையா?''

''ஆம். வேலை. நிரந்தர வேலை. உழைக்க அனுமதி வேண்டும். என் உழைப்புக்குக் கூலி வேண்டும்.''

''சரி விஷயத்தைச் சொல். விரைவில் வேலைக்கு ஏற்பாடு செய்கிறேன்.''

''முதலில் வேலை. பிறகு செய்தி.''

''பிளாக்மெயில் செய்கிறாயா?''

''வேறு வழியில்லை.''

''கொஞ்சம் காத்திரு.''

அதிகாரி உடனே உயரதிகாரிகளுடன் பேசி, மேல் மட்டங்களைக் கலந்து பேசி, ஆத்மா அனுமதியுடன் ஒரு வேலைக்கான ஆர்டர் தயாரித்து, ஜோவுக்கு வி.வியில் காட்ட, பிரிண்டர் ஜெராக்ஸ் செய்தது. ஜோ முகம் ஆயிரம் சூரியனாக ஜொலித்தது.

''கேட்டுக் கொள்ளுங்கள். அந்த மனிதர் பெயர் கடவுள். சுமார் ஆறு அடி உயரம். பழுப்பு நிறம். வயதான தோற்றம். எனக்கு உணவு தந்தார். பின் சந்தோஷ நிலையம் எண் 5க்கு சென்றார். பெட்டி நிறைய ரூ வைத்திருந்தார். NEM ல் இருந்து மியாமி செல்வதாகச் சொன்னார். இனி தொடர்வது உங்கள் திறமை. வேலை தந்து, என் ஜன்மத்தைச் சாபல்யமடைய வைத்த கடவுளே...! உனக்கு நன்றி.''

செய்திகள் நொடிகளுக்குள் மியாமிக்குப் பறந்து, ஊர் பூராவும் உளவுக் கண் கழுகாய் விரிந்தது.

ஆனால், மியாமியில் இருந்து எதிர்த் திசையில் வெகு தொலைவில் இருந்த ஓர் அழகிய பச்சை நகரில் ஸ்ரீநிவாஸ குரு இறங்கினான். குளுமையான ஊர். வி.வியில் குரு பற்றிய எச்சரிக்கை வெடித்த போது ஒரு மாபெரும் ஊர்வலம் கோஷங்களுடன் போனது.

''அலெக்ஸ்...!''

''ஒழிக!''

''கம்ப்யூட்டர்...!''

''ஒழிக!''

''எங்களுக்குத் தேவை...''

''உடனடி வேலை!''

''ஒழிப்போம் ஒழிப்போம்...''

''ஓய்வில்லம் ஒழிப்போம்!''

''உழைப்போம் உழைப்போம்...''

''உரிமையுடன் உழைப்போம்!''

''உணவும் உடையும் போதுமா?''

''உழைக்க உரிமை வேண்டாமா?''

குரு மெதுவாய்க் கூட்டத்தில் கலந்து







- மதுரை இ. ஆதிராஜன்

கொண்டு குசலம் விசாரித்தான். அந்தத் தொழிற்சாலையில் புதிதாக கம்ப்யூட்டர் ரோபோக்களை நியமிக்க, அவை நூற்றுக் கணக்கானவர்களின் வேலையைப் பகிர்ந்து கொண்டதால், இவர்களுக்கு வேலை போய் விட்டது. அலெக்ஸ் முதலாளி. வேலை வேண்டி ஸ்டிரைக் செய்கிறார்கள். கலவரம் செய்கிறார்கள். போராட்டம்.

எல்லாம் வேலைக்காக.

வேலைக்காக.

வேலைக்காக.

குரு முடிவுக்கு வந்து கூட்டத்திலிருந்து பிரிந்தான்.

(தொடரும்)

# எட்டாம் நாள் வராத கடன்

**'ச**பாஷ்'

மூர்த்தி எவ்வளவோ ஜாக்கிரதையாகத்தான் ஒவ்வொரு அடியையும் வினாடியையும் கடப்பதாக நினைத்தான். அப்படியும் அது நடந்து விட்டது.

வெள்ளை உடுப்பு. இன்றுதான் சலவையிலிருந்து வந்தது. நல்லவேளை. இது அஸ்தமன நேரம். யாரும் சட்டென்று பார்க்க முடியாது.

எல்லாம் இந்த வரதுவினால் வந்தது... மனுஷன் கைமாற்று வாங்கினாலும் வாங்கினார், அதிலிருந்து ஒவ்வொன்றாய் அவஸ்தான்!

வரதுவின் குடியிருப்பு மூன்றடி நடைபாதையை அடக்கியது. கடைசி வீடு. அதாவது முன்னே இருந்து தொலைத்திருக்கலாம். முன் வீட்டுக்காரனின் பொறுப்பற்ற மாடு (கட்ட வேறு இடமா இல்லை) ஒவ்வொரு முறையும் பழிதீர்க்க வாலை விசிறி அடிக்கிறது. சட்டையில் படியும் அழுக்கை மீறி துர்நாற்றம் தெறிய வைக்கிறது.

இதோடு போவதில்லை. கோணல் மாணலாய்ச் சாத்தி வைக்கப்பட்டிருக்கும் சைக்கிள். அதன் கோரமான ஹாண்டில்பார் ஒருமுறை பட்டையைத் தெறிக்க வைத்திருக்கிறது. அவனவன் சௌகரியமாய் வீட்டு ரேடியோவை அலற விட்டு உள்ளே இருக்கிறான்.

வரதுவின் மனைவி நிலைப்படிக் கட்டில் கட்டைச் சீப்பால் தலையை வாரிக் கொண்டிருந்தாள். வாருவதற்குத் தேர்ந்தெடுத்த முகூர்த்தத்தைப் பார்! இவனைப் பார்த்த மாதிரியாகவே அவள் காட்டிக் கொள்ளவில்லை. சரண் அடை.....

''வரது...''

''ப்ச்....'' - அவள் வேலை அவளுக்கு... வரது வந்தால் என்ன.. வராவிட்டால்தான் என்ன..

''நா வந்ததாச் சொல்லுங்க'' - தன் குரலில் ஏன் இப்படி ஒரு அந்நியம் வர வேண்டும்?

அவள் பதில் சொல்வதாக இல்லை. கொக்கிற்கு மீன் - இவளுக்குச் சீப்பு. பிடுங்கினால் குழந்தை போல் வீறிடுவாளா? ஒருநாள் செய்து பார்க்க வேண்டும்!

இருட்டிற்குக் கண் பழகியிருந்தது. மாடு ஏமாந்திருந்த வேளையில் சடாரென்று கடந்தான்.

**"எ**ன்ன, இன்னிக்கும் வரது வீடா?'' - சமயங்களில் ரேணுகா நோகடித்து விடுகிறாள்.. ஒரு எருமை மாடு செய்த வேலையால் யாரா

# சுப்ரமணியன் ரவிச்சந்திரன்



ருடைய இகழ்ச்சிக்கெல்லாம் ஆளாக வேண்டியிருக்கிறது!

"காப்பி குடேன்..." சட்டை சுருட்டப்பட்டு மூலையில் பந்தாய் எறியப்பட்ட போது நாணயங்கள் சிதறின.. போகட்டும்...!

காப்பி தீர்ந்த நிலையில் களைப்பையோ, தலைவலியையோ போக்க லாயக்கற்றதாய் இருந்தது.

ரேணுகா சீண்டுவதற்காகவே இப்படி ஒரு காப்பியைத் தயார் செய்திருக்கிறாள். இது குறித்துக் கேள்வி எழுப்பினால் யோசிக்காமல் பதில் வரும். 'வாசுவின் கடனை வசூலித்து வா... அரக்கு போல் காப்பி வராவிட்டால் கேள்!'

அவனைப் பொறுத்த மட்டும் வாசு தர வேண்டிய தொகையின் மூலம் என்னென்னவோ கடச் செலவுகளைச் செய்யலாம்..

எதன் பேரில் வாசுவுக்குக் கடன் தந்தான்? ஒரே அலுவலகமா, தெருவா? மூர்த்தியும் வாசுவும் சந்தித்த முதல் பரிச்சயம் கூட இப்போது நினைவின் பிரதேசத்தில் இல்லை... ஏதோவொரு அவசியமான பண இருப்பு வேளையில் வாசு கேட்டபோது பிரகாசித்தமாய்க் கொடுத்தது பிசகுதான்..

பணம் பெற்ற எட்டாம் நாள் திருப்பித் தருவதாக வாசு சொன்ன ஞாபகம். எட்டெட்டு அறுபத்து நாலு; எட்டொம்போது எழுபத்து ரெண்டு என்று நாட்கள் ஓடி விட்டன!

முதல் இரண்டு முறை வாசு சந்தித்த போது நாலாம் நாள் வரும் பணத்தில் கொடுத்து விடுவதாகச் சொன்னார். சங்கோஜத்துடன் 'அதனால் என்ன...' என்றான்.

அதன் பிறகு இவன் பேச்செடுக்கும் முன்பு அவர் தன் ஐம்பது வருட சரித்திரத்தில் ஏதாவதொரு ஏட்டை இவன் முன் பரத்தி விடுகிறார். அதைக் கேட்கும் சுவாரஸ்யம் கூட ஒவ்வொரு முறையும் இவன் கடனைக் கேளாமலேயே விடைபெற்று விடுகிறான்.

ஒரு கட்டத்தில் அந்த வயதான மனிதரை மன்னித்து அவரது பாக்கியை மறந்து போய் விடக் கூடச் சித்தமானான்.

ரேணுகா?

அவளுக்கு இது மூர்த்தியின் முன்னாள் காதலியுடன் கொண்ட தொடர்பைப் போன்றது. அவன் இல்லை இல்லை என்றாலும் அவள் விடமாட்டாள். இதில் உள்ள திருப்தி குறைந்த கட்டணத்தில் பார்க்கும் காலைக் காட்சியில் கூட இல்லை.

பஸ்ஸிலிருந்து வரது இறங்கினார். கையில் புது மஞ்சள் பை, பூ, பழங்கள் பலே! கடனைக் கொடுக்கத் தெரியவில்லை - இதெல்லாம் முடிகிறது!

“மூர்த்தி தம்பி... பார்க்கணும்னு நெனைச்சேன், தெய்வம் மாதிரி வந்துட்டீங்க.”

“என்ன விஷயம்?” ம்ஹூம்! செத்தாலும் குரலில் கடுமை வரப் போவதில்லை...

“நம்ம பொண்ணு சடங்காயிருக்கு... சாயந்தரம் விசேஷம். அவசியம் வரணும். ரொம்ப முக்கியப்பட்ட மனுஷாளோட, வீட்டோட செய்யலாம்னு.”

மூர்த்தி ஆச்சரியமாய்க் கேட்டான்.

“ஏது பணம்..?”

“அதுக்கும் கடவுள் வழி காமிச்சிட்டாரு. ஓவர்சீயர் தாமோதரன் குடுத்தான். பத்து நாள்ல ஜீ.பி.எஃப் வந்துடும். சரி நான் வரேன். எக்கச்சக்கமா வேலை இருக்கு.”

மூர்த்திக்குச் சிரிப்பு வந்தது. தாமோதரனா! அவனா? சரியான வைஷ்ணவ! அதே நேரத்தில் அவன் சாதாரண பேர்வழிகளுக்குக் கடன் தர மாட்டானே. இதில் யார் சாமர்த்தியசாலி வரதுவா, தாமோதரனா?

பதினைந்து நாட்களுக்குப் பிறகு பாவா சாகிப் கடையில் தாமோதரனைச் சந்திக்கும் போது மூர்த்திக்குக் குரூரமாய் இச்சை கிளர்ந்தது.

“என்ன தாமு... வரது சார் சொன்னாரு... உனக்குப் பணம் தரணுமாமே?” பயம் குதிப்பான். மாட்டு வாலில் பட்ட அடி, பேச வைக்கும்!...

தாமு சிக்கனமாய்ச் சிரித்தான்.

“நீ பாத்து ரொம்ப வருஷம் ஆச்சா மூர்த்தி? பணம் குடுத்து ஒரு மாமாங்கம் ஆச்சு. வரது சார் ஆஃபீஸ் ப்யூன் ஜீ.பி.எஃப் லோன் வந்ததை மொதல்ல எனக்குச் சொல்லிட்டு அப்புறந்தான் அவருக்கே சொன்னான். போய் நின்னேன்.. டாண்ணு குடுத்துட்டாரு. தர்மிஷ்டன்...”

மூர்த்திக்குக் கோபம் கபாலம் வரை ஏறியது. தாமோதரன் விடைபெற்றதைக் கூடக் கவனிக்க விடாமல் கண்ணை மறைத்தது.

என்ன நினைத்தார் என்னை! இன்றைக்கு இந்த மூர்த்தி யாரென்று புரிய வைக்கிறேன்.

இம்முறை மாடு சாதுவாய் அசைபோட்டபடி நின்றது. அது இன்னும் சேட்டை செய்தால் அதன் இறுதிக் காரியம் நடக்க ஏற்பாடாகியிருக்கும். வழியில் நிரடும் சைக்கிளும் இல்லை. பரவாயில்லை; சகுனம் சிறப்பாகவே உள்ளது.

கோணாமல், பார்த்த மாத்திரத்தில் பதில் சொன்னாள் வரதுவின் மனைவி.

“அவரு வரலே...”

“எப்பத்தான் வருவாராம்? கள்ளன் மாதிரி பாதி ராத்திரியிலயா? பிறத்தியார்கிட்ட பணம் வாங்கினோமேன்னு ஒரு இது இருக்க வேணாம். ஏதோ வயசானவராச்சேன்னு பாத்தா ரொம்பத்தான் சதாய்க்கறாரு! நல்லா கேட்டுக்குங்க - சும்மா சும்மா வர மாட்டேன். நாளைக்கு நான் வர்றச்சே பணம் தயாரா இல்லேன்னா மரியாதையா இருக்காது. சொல்லி வையுங்க... சே!”

மூச்சு வாங்கியது. விடுவிடுவென்று நடந்தான்.. மாட்டின் முதுகில் ஒரு தட்டு தட்ட அது சிலிர்த்துக் கொண்டு புஸ்ஸென்று இரைந்தது.

வீட்டிற்குப் போக மனமின்றி மைதானத்துப் பெஞ்சில் அமர்ந்தான்... கோபம் குறைந்து தன் மேல் வெறுப்பு மிகுந்தது. தான் எப்படி இவ்வாறு கோபத்தைக் கொட்டினோம். இதற்குத்தான் உலகமே கட்டுப்படுகிறதா.. சாத்வீகம் புறக்கணிக்கப்பட்ட ஒன்றா...?

எவ்வளவு நேரந்தான் உட்கார்ந்திருப்பது..

தெரு முனையில் திரும்பும்போதே ரேணுகாவின் தலை தென்பட்டது. இன்றைக்கு இவளையும் ஒரு கை பார்த்தால் என்ன..? வர வர வாய் நீளுகிறது. சண்டைக்காகவே வாசலில் காத்துக் கிடக்கிறாள். போதாத நேரம்...

“ஏன் இவ்ளோ நேரம்?”

“உள்ள வந்து சொல்லலாமா.. இல்ல இங்கியே சொன்னாத்தான் விடுவியா? கேட்டுதான். ஆனா நிச்சயமா வரதுவைப் பாக்கப் போனதால இல்ல.. இனிமே நான் போகவும் போறதில்ல. சும்மா நைநைன்னு குறுக்கு விசாரணை பண்ணாதே... அர்த்தமாச்சா?”

ரேணுகா பதில் பேசாமல் போனாள். நன்றாக வேண்டும்! சும்மா இருக்கிறாயா சொரூபத்தைக் காட்டவா கதைதான்.

காப்பியுடன் பணத்தை வைத்தாள்.

“ஏது?”

“சாயங்காலம் நாலு மணியிலேர்ந்து உங்களுக்காக வெயிட் பண்ணாரு வரது. இப்பத்தான் நேரமாச்சுன்னு பொறப்பட்டாரு. அவரு குடுத்ததுதான். காலைல உங்களைப் பார்க்கறேன்னாரு...”

ச்சை... வரது இப்படி செய்வாரென்று எதிர்பார்க்கவே இல்லை!

கொட்டிக் காப்பி குடித்தும் தலையை வலித்தது மூர்த்திக்கு.



“அவருக்கு ரொம்பவும்தான் கல் மனசு.”

“எதை வைச்சுச் சொல்றீங்க?”

“காரியம் ஆகணும்னா டேபிளிலே எதையாவது வெய்ட்டா வைக்கணும்னு சொன்னதுக்குக் கல்லை வைச்சுட்டுப் போறாரு!”

– வி. வி. சத்யநாராயணன்

# சக்கரவர்த்தித் திருமகன்

## 45. சூர்ப்பணகை

பஞ்சவடியை அடைந்ததும், ''பார்த்தாயா, லக்ஷ்மணா! எவ்வளவு மனோகரமான இடத்தை அகஸ்தியர் நமக்கு அமைத்துக் கொடுத்தார்!'' என்று அங்கு கண்ட அழகை மெய் மறந்து அனுபவித்து ராமன் பேசுகிறான்.

''நானும் நீயும் சீதையும் இந்த இடத்தில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு எவ்வளவு காலமேனும் சந்தோஷமாக இருக்கலாம். மலைகளைப் பார்! அதிக தூரத்திலுமில்லை, அதிக அண்மையிலுமில்லை. மான் கூட்டங்களைப் பார். மரங்களும் மரங்களில் விளையாடும் பறவைகளின் இனிய நாதங்களும் புஷ்பங்களும் தண்ணீரும் நீர்ப் பறவைகளும் மணலும் எல்லாம் எவ்வளவு ரமணீயமாக இருக்கிறது. இங்கே நீ ஒரு சரியான இடத்தைப் பார்த்து ஆசிரமம் அமைப்பாய்'' என்று லக்ஷ்மணனுக்குச் சொன்னான்.

ஒரு இடத்தைக் கண்டு லக்ஷ்மணன் மிக சாமர்த்தியமாக ஆசிரமம் கட்டி முடித்து விட்டான். இங்கே வால்மீகி முனிவர் நின்று லக்ஷ்மணனுடைய சாமர்த்தியத்தையும் சுறு சுறுப்பையும் விளக்குகிறார். ஆசிரமம் கட்டினதையெல்லாம் நன்றாக விவரிக்கிறார். மண் சுவர் எழுப்பியது, மேலே கூரை பரப்பியது எல்லாவற்றையும் விஸ்தாரமாகச் சொல்லுகிறார். கட்டி முடிந்ததும் ராமன் தம்பியை அணைத்துப் பரவசமாகி, ''லக்ஷ்மணா! நீயே எனக்குத் தகப்பன் ஆனாய்!'' என்று சொல்லி உள்ளம் உருகி ஆனந்தக் கண்ணீர் விட்டான்.

அரண்மனையில் வசித்த இராஜகுமாரன் இதையெல்லாம் எப்படி, எங்கே கற்றான் என்று நாமும் ஆராய வேண்டும். காட்டில் சாமான்களைத் தேடியடைந்து, குடிசையைக் கச்சிதமாகக் கட்டுவதற்கு வேண்டிய அறிவும் பயிற்சியும் அந்தக்காலத்தில் அரசகுமாரர்கள் பெறும் கல்வியில் அடங்கியிருந்தது என்று கண்டு கொள்ளலாம்.

பஞ்சவடி ஆசிரமத்தில் ராமனும் சீதையும் லக்ஷ்மணனுடைய அன்புப் பணியைப் பெற்றுச் சுகமாகக் காலம் கழித்தார்கள்.

ஒரு நாள், முன் பனிப் பருவ ஆரம்பத்தில் மூவரும் அதிகாலையில் கோதாவரி நதிக்கரை நோக்கி வழக்கப்படி சென்றார்கள். குளித்து, காலை வந்தனம் முடித்துப் பாத்திரங்களைச் சுத்தி செய்து தங்களுக்கு வேண்டிய ஜலம் எடுத்துப் போவதற்காகச் சென்றார்கள். அந்தப் பருவத்தின் விசேஷங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே போனார்கள்.

மாதங்களில் மார்கழி மாதமே சிறந்தது என்பது நம் முன்னோரும் பெரியோரும் கண்ட உண்மை. லக்ஷ்மணன் பரதனை நினைத்துக் கொண்டான்.

''இந்தச் சமயத்தில் அன்புக்குரிய பரதன் விரதங்களை அனுசரித்து வருவான். எவ்வளவு சுகமாயிருக்க வேண்டியவன். நாம் வனம் சென்று விட்டோம் என்று தானும் கஷ்டமான விரதங்களை மேற்கொண்டிருக்கிறான். அவனை நினைக்க நினைக்க என் உள்ளம்

ராஜாஜி

வருத்தம் அடைகிறது. ஐயோ பாவம், சாப்பாட்டைக் குறைத்துக் கொண்டு இந்தக் குளிர் காலத்திலும் தரையில் படுப்பான். குளிரில் சரயூ நதியில் குளிக்கப் போவான். அண்ணா! நாம் எவ்வளவு நல்ல சகோதரனைப் பெற்றோம். அவன் பேச்சு, அவன் நடை, அவன் உள்ளம் எல்லாம் எவ்வளவு சுத்தம். அனுபவிக்க வேண்டிய சுகங்களை யெல்லாம் விட்டு விட்டு நமக்காக விரத வாழ்க்கை நடத்துகிறான். அவனை நினைத்தால் மிகவும் துக்கமாக இருக்கிறது. நம் தந்தையை அவன் எல்லா விதத்திலும் ஒத்திருக்கிறான். ஜனங்கள், தாயைப் போல் மகன் இருப்பான் என்று சொல்லுவார்



''போன வருடம் போலவே, இந்த வருடமும் நீங்கதான் என் சக்சேரிக்குத் தலைமை தாங்கணும்...!''

''சாரி சார்! இனிமே என்னால தாங்க முடியாது....!!''

– சீர்காழி பலராமன்.

கள். அது பரதன் விஷயத்தில் தவறாக இருக்கிறது. இவன் தந்தையின் சுபாவமே கொண்டிருக்கிறான். இந்தக் கைகேயி ஏன் இப்படிக் குரூர சுபாவம் பெற்றாள்? அவளுக்கு எப்படி இவ்வளவு நல்ல குமாரன் பிறந்தான்'' என்று லக்ஷ்மணன் பொங்கி வந்த நினைவுகளைப் பேசிக் கொண்டே போனான்.

''தம்பி, கைகேயியைத் தூஷிக்க வேண்டாம். பரதனைப் பற்றிச் சொல். நம் தந்தையைப் பற்றிச் சொல். ஆனால் நம் சிறிய தாயாரைப் பற்றிக் குறை சொல்ல வேண்டாம். பரதனைப் பற்றி நீ சொன்னதெல்லாம் உண்மை. நான் எவ்வளவு நிச்சய புத்தியுடன் ஊரை மறந்து வனவாசம் செய்தாலும், பரதன் ஞாபகமாகவே இருக்கிறது. அவனை இப்போதே பார்க்க வேண்டுமென்று ஆசையுண்டாகிறது, லக்ஷ்மணா! நாம் எப்போது அவனைப் பார்த்து மகிழ்வோம்? நாம் நால்வரும் மறுபடி எப்போது ஓரிடத்திலிருப்போம்? பரதனுடைய அமிருதம் போன்ற பேச்சு என் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது.''

இவ்வாறு மார்கழி மாதத்தில் ஊரையும் பரதனையும் நினைத்துக் கொண்டு அதிகாலையில் கோதாவரியில் ஸ்நானம் செய்தார்கள். இந்தக் கட்டம் படிக்கும் போது நம்முடைய உள்ளம் கரைகிறது.

பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பணம் பண்ணி விட்டுச் சூரிய நமஸ்காரம் செய்து விட்டு, மகாதேவனைப் போல் ஜடை தரித்த ராமன் தெய்வீக ஒளி வீச சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ஆசிரமம் திரும்பிப் போனான்.

காலை செய்ய வேண்டிய காரியங்களையெல்லாம் செய்து விட்டு விச்ராந்தியாக ஆசிரமத்தில் உட்கார்ந்து கொண்டு, புராண இதிகாசக் கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் ராமனுடைய முகம் சித்திரை மாதத்துப் பூரண சந்திரனைப் போல் பொலிவு பெற்றுப் பிரகாசித்தது. பேசிக் கொண்டிருந்த கதையில் மனம் லயித்திருந்த அந்தச் சமயம் திடீர் என்று ஒரு ராக்ஷஸ ஸ்திரீ அங்கே வந்து சேர்ந்தாள். இவள்தான் சூர்ப்பனகை, ராவணனுடைய சகோதரி.

தேவலோக வாசி ஒருவனைப் போல் அழகிய வடிவம் கொண்ட ராஜகுமாரனை அவள் பார்த்தாள். அவலக்ஷணமே உருக் கொண்ட அந்த அரக்கி மன்மதனுடைய அழகு பெற்ற ராமசந்திரனைப் பார்த்ததும் காம பரவசமாகிப் போனாள். மகா விகாரமான அவள், காமத்தால் பீடிக்கப் பட்டுப் பேச ஆரம்பித்தாள்.

''தவம் செய்பவர்களைப் போல் ஜடை தரித்துக் கொண்டு, மனைவியையும் அழைத்துக் கொண்டு, வில்லும் அம்புமாக ராக்ஷசர்களுடைய காட்டுக்கு வந்திருக்கும் நீ யார்? எதற்கு வந்திருக்கிறாய்? உண்மையைச் சொல்வாய்!'' என்றாள்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் தன் பெயர், ஊர், சரித்திரம் முழுதும் சரியாகச் சொல்லி விட்டு, கேட்டவருடைய குலம், காரியம் ஆகியவற்



றைக் கேட்பது அக்காலத்துப் பண்பாடு. அந்தப் பண்பாட்டில் பழகின ராமன்,

"தேவர்களுக்குச் சமானமான சௌரியம் பொருந்திய தசரத மகாராஜ னுடைய மூத்த குமாரன் நான். என்னை ராமன் என்று அழைப்பார்கள். இவன் என் தம்பி லக்ஷ்மணன். இவள் என் மனைவியாவாள். இவள் பெயர் சீதை. என் தாயும் அரசனான தந்தையும் சொல்லி யனுப்பியபடி தருமத்தை விரும்பி இந்தக் காட்டில் வனவாசம் செய்ய இங்கே வந்திருக்கிறேன். தயவு செய்து சொல்வாய், நீ யார்? எந்தக் குலம்? உன் சொரூபத்தைப் பார்த்தால் ராக்ஷஸப் பெண் என்று தோன்றுகிறது. இவ்விடம் என்ன காரியம் பற்றி வந் தாய்? சரியாகச் சொல்வாய்" என்றான்.

"ராவணனைப் பற்றி நீ கேள்விப் பட்டிருக்கிறாயா? விச்ரவஸனுடைய வீர புத்திரனும் ராக்ஷஸர்களுடைய அரச னுமான அந்த ராவணனுடைய சகோதரி யாவேன் நான். என் பெயர் சூர்ப்ப னகை. ராவணனுடைய சகோதரர்க ளான கும்பகர்ணனும் விபீஷணனும் மகா பலவான்கள். தவிர இக்காட்டில் அரசுபுரியும் கரனும் தூஷணனும் என் சகோதரர்கள். இவர்களுடைய தேக பலமும், அதிகாரமும் பெரிது. ஆனால் நான் அவர்களுக்கு உட்பட்டவள் அல்ல. என்னிஷ்டப்படி நான் எதையும் செய்வேன். இந்த வனத்தில் என்னைக் கண்டு யாரும் பயப்படுவார்கள். உன் னைக் கண்டது முதல் உன்மேல் அடங் காத காதல் கொண்டு விட்டேன். நீதான் என் கணவன். ஏன் இந்தச் சிறு பூச்சி யைப் போன்ற ஒரு பெண்ணைக் கட்டிக் கொண்டு அலைகிறாய்? காட்டில் உனக் குத் தகுந்த மனைவி நான்தான். என் கூடச் சேர்ந்து எங்கும் சஞ்சரித்து சந்தோ ஷமாக இருப்பாய். நான் எந்த வடிவத் தையும் எடுப்பேன். பயப்படாதே! இந்தப் பெண்ணையும் உன் தம்பியை யும் உடனே தின்று முடித்து விடுவேன். வா, என் கூட! தயங்க வேண்டாம்" என்று காமத்தால் பீடிக்கப்பட்டு ராக்ஷஸ ஜாதியின் பண்பாட்டின்படி பிதற்றினாள்.

ராமனுக்கு இந்த அரக்கியின் காம விகாரமும் நடவடிக்கையும் பேச்சும் ஒரு விநோதமாக இருந்தது. சிரித்து விட்டு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

"அழகியே, என்னைக் குறித்து நீ ஆசைப்படுவது உனக்குத் துன்பமாகும். இந்தப் பெண் என் மனைவியானவள் கூட இருக்கிறாள். இரண்டு மனைவிகள் வியாபாரம் தொந்தரவுக்கு இடமாகும். இது உனக்குத் தெரியுமல்லவா? இதோ இருக்கிறான் என்னுடைய தம்பி. தனி யாக இருக்கிறான். அழகிலும் பலத்தி லும் எனக்குச் சமம். இவன் உனக்குத் தகுந்த புருஷன். இவனைக் கேட்டுப் பார். என்னை விட்டு விடு" என்றான்.

மேல் நடக்க வேண்டியதை லக்ஷ் மணன் பார்த்துக் கொள்ளுவான் என்று

இவ்வாறு ராமன் சொன்னான்.

அரக்கியும் ராமன் சொன்னபடி அவனை விட்டு விட்டு ராமனுடைய அழகுக்குக் குறையாத லக்ஷ்மணனை வரித்துப் பேச ஆரம்பித்தாள். ''வீரனே, வா என்னுடன். இருவரும் இந்த தண்ட காரண்யத்தில் சந்தோஷமாகக் கூடிக் குலாவித் திரியலாம்'' என்றாள்.

லக்ஷ்மணனும் அண்ணன் ராம னுடைய பரிகாசத்தில் சேர்ந்து கொண்டு, ''பைத்தியக்காரி ஏமாந்து போகாதே! நீ, யார்? நான் யார்? நான் அண்ணனுக்கு அடிமையாக இங்கே இருக்கிறேன். நீயோ அரசகுமாரத்தி. ஓர் அடிமையைக் கட்டிக் கொண்டு அடி மைக்கு அடிமையாக நீ வாழலாமா? ஏமாந்து போகாதே! என் அண்ணன் ராம னுக்கு இரண்டாம் தாரமாக அமைவதே மேலானது. இந்தச் சீதைக்காக நீ பயப்பட வேண்டியதில்லை. ராம னுடைய காதல் உன் பேரில்தான் வேகம் கொள்ளும். சீதையை அலட் சியம் செய்து விடுவான். நீ சுகமாக இருக்கலாம்'' என்றான்.

ஒரு பெண்ணை, அதிலும் காதல் கொண்ட பெண்ணை, இப்படியெல் லாம் வேதனை செய்யலாமா என்று சில மேதாவிகள் கேட்கலாம். எதிரில் ஒரு விகார மிருக சொரூபத்தை வைத்துக் கற்பனைச் சக்தியைப் பயன்படுத்தி னால் அவ்வாறு கேட்க மாட்டார்கள்.

பிராகிருத கிராமிய வேகத்தால் பீடிக்கப்பட்ட அரக்கி, லக்ஷ்மண னுடைய பேச்சை அப்படியே எடுத்துக் கொண்டு மறுபடியும் ராமனிடம் சென்று பக்கத்திலிருந்த சீதையைப் பார்த்தாள்.

''இந்தப் பூச்சியல்லவா எனக்கும் உனக்கு மிடையில் தடையாக இருக் கிறாள். வயிறு ஒட்டிப் போய்க் கிடக் கும் இவள் மேல் உனக்கு ஒரு மோகமா? இதோ, இவளை இந்தக் கணம் முடித்து விடுகிறேன். உன்னை அடையாமல் நான் உயிருடன் இருக்க முடியாது. இவளை இப்போதே ஒழித்து விடுகிறேன். பிறகு நீ என்னுடன் சந் தோஷமாகச் சேருவாய்'' என்று சொல்லி அந்த அரக்கி சீதையின் மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தாள்.

அந்தச் சமயம் ராமன் இடையில் புகுந்ததால் சீதை தப்பினாள். வேடிக் கை வலுத்துப் போயிற்று என்று எண்ணி ராமன்,

''லக்ஷ்மணா! இவளைப் பார்த்துக் கொள்! சீதை எப்படியோ தப்பிப் பிழைத்தாள். இந்த அரக்கிக்குப் பாடம் கற்பிக்க வேண்டும்'' என்றான்.

சீதையைத் தாக்கி கொல்லப் போன அரக்கியை உடனே லக்ஷ்மணன் கத்தியை எடுத்து, அவளை அங்கஹீனம் செய்து விட்டு, ''சீ! போ!'' என்றான்.

அவமானப்பட்டு ரத்த காய மடைந்த அரக்கி பெருங் குரலில் வீறிட்டு அழுது கொண்டு வனத்துக்குள் மறைந்தாள்.

ரத்தம் பெருக நேராக ஓடிப் போய் சூர்ப்பணகையானவள் கரன் இருந்த இடம் சென்று அவன் முன்னிலையில் ஆகாயத்திலிருந்து இடி விழுவது போல் ''ஐயோ!'' என்று அலறி விழுந்தாள்.

அரக்கர்கள் சூழ அமர்ந்திருந்த ராக்ஷஸத் தலைவனான கரன், 'என்ன செய்தி?' என்று விசாரித்தான்.

''என்னைப் பார்! இந்த அநியா யத்தைச் செய்த ராமனும் லக்ஷ்மணனும் இந்தக் காட்டில் வசிக்கிறார்கள். நீயும் இருக்கிறாய்!'' என்றாள்.

கரன் எழுந்து, ''தங்காய்! என்ன இது? எனக்கு ஒன்றும் விளங்க வில்லை. புத்தி சுவாதீனம் செய்து



"என்னப்பா இது அநியாயமா இருக்கு...., நீ 'பில்' போடறதுக்கு என்னோட "பேப்பர் ரோஸ்ட்"லேந்து தான் கிழிக்கணுமா என்ன?"

- சுவிட் ரவி.

"அந்த ஆள் வாழ்க்கைல இப்பத்தான் முதல் தடவையா கல்யாண மண்டபத்தில செருப்புக் கிளப்பறார்னு நினைக்கிறேன்!"

"எப்படி சொல்றீங்க?"

"எடுத்த செருப்பைக் கண்ணில் ஒத்திக்கறார் பாருங்க!"

- எஸ். ரமேஷ்.




---

கொண்டு விவரமாகச் சொல். யார் உனக்கு இந்த அங்கவீனம் செய்யத் துணிந்தது? இந்த வனத்தில் என் கோபத்துக்கு ஆளானது யார்? எவன் காக்கைக்கும் கழுகுக்கும் இரையாக விரும்பி உன்னை இப்படி அவமதித்தான்? சும்மா இருந்த கிருஷ்ண சர்ப்பத்தை யார் கால் விரலால் குத்தினது? அந்த மடையன் யார்? எங்கே? எல்லாம் விவரமாகச் சொல். இதோ அவன் மடியப் போகிறான்! அவன் ரத்தத்தை மண் உறிஞ்சிக் குடிக்கப் போகிறது. எழுந்து, நின்று நடந்ததைச் சரியாகச் சொல்!" என்றான்.

சூர்ப்பனகை சொன்னாள்:

"இரண்டு அழகிய மனிதர்கள் - தசரதன் குமாரர்களாம், தவ வேஷம் பூண்டு ஒரு பெண்ணுடன் இந்தக் காட்டுக்கு வந்திருக்கிறார்கள். இவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்து கொண்டு அந்தப் பெண்ணைக் காரணமாக வைத்துக் கொண்டு என்னைத் தாக்கி இந்த அக்கிரமம் செய்து விட்டார்கள். இந்தத் துஷ்டர்களின் ரத்தத்தைக் குடிக்க ஆசைப்படுகிறேன். இவர்களை நீ வதம் செய்வாய். இதை நீ முதலில் செய்ய வேண்டும் தம்பி. பிறகு வேறு வேலை" என்றாள்.

கரன் உடனே தன் சேனாபதிகளுக்கு உத்தரவிட்டான். "இந்தக் கணம் சென்று அந்த இரு துஷ்டர்களையும் கொன்று, அவர்கள் பிரேதங்களை இவ்விடம் கொண்டு வாருங்கள்; இவள் சொல்லும் பெண்ணையும் இழுத்து வாருங்கள். தாமதிக்க வேண்டாம்!" என்றான்.

பதினான்கு சேனாபதிகளும் உடனே புறப்பட்டார்கள்.

கம்பருடைய ராமாயணத்தில், காதல் கொண்ட சூர்ப்பனகை ஓர் அழகிய மானிடப் பெண்ணின் வடிவம் பூண்டு ராமனை வரித்ததாகவும் அதன் பேரில் நிகழ்ச்சிகள் தனிப் போக்கில் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன. சூர்ப்பனகை நிகழ்ச்சியைக் கம்பர் வால்மீகியை விட்டுத் தனிப் போக்கில் கொண்டு போயிருக்கிறார். கம்ப ராமாயணத்தில் இது ஒரு மிக அழகான கட்டம்.

ராமச்சந்திரனைப் பற்றி இவன் பெண்ணைக் கொன்ற வீரன், காமம் மேலிட்டு அணுகிய ஒரு ஸ்திரீயை இவன் அவமதித்து ஹிம்சை செய்தான், மறைந்து நின்று வாலியைக் கொன்றான், எதிர்த்து நின்று அவனிடம் தோல்வி பெறத் துணியவில்லை. சீதையை அக்கிரமமாகக் காட்டுக்கு அனுப்பினான். அக்கிரமம் அல்ல என்றால் சீதையை அவன் சந்தேகப் பட்டான் அல்லவா? அவனுடைய சீலம் எமக்கும் ஐயமே, - இவ்வாறும் இன்னும் பலவிதத்திலும் அசூயையில் பிறந்த விமரிசனங்களில் இறங்கிச் சிலர் களிப்படைவதைக் காண்கிறோம். அறிவுக்கும் விமரிசன சாமர்த்தியத்துக்கும் நாட்டில் குறைவில்லை. அன்பும் ஆர்வமும் கலந்த சுத்த அறிவு காணவில்லை. ராமனுடைய குணத்தில் குற்றம் தேடுவோர்கள் தேடுக. ராமனை விட நல்ல முறையில் தருமத்தைக் கைப்பிடித்துத் தாங்கள் காட்டும் குறைவுகளின்றித் தங்கள் வாழ்க்கையை நடத்த முயல்வார்களானால் பிழைத்த ராமனுடைய ஆன்மாவும் ராம பக்தர்களுடைய உள்ளமும் பெரு மகிழ்ச்சி அடையும். ராமனுடைய நற்குணங்களை விட்டு விடாமல் ராமனிடம் கண்ட குறைகளைத் தாம் அகற்றினால் யார் வேண்டாம் என்று கூறுவார்கள்?

(தொடரும்)

பொறியியல்
என்ட்ரன்ஸ் எழுதி
விட்டு, எதற்கும்
இருக்கட்டும்
என்று ஏதாவது
ஒரு கல்லூரியில்
சேர்ந்து விடுகிறது
எல்லா வருட





* வெங்கட்ராமன்

பிளஸ் டூ முடித்த பிள்ளைகளின் பெற்றோர், அ
காலேஜாக 'ஷட்டில்' ஆடப்படுவது வருஷாந்திர ஸ
குறைகிற காண்டம். இத்தனை சிரமப்பட்டாவது ப
கிழித்து விடப் போகிறாய், மாறாக ஒரு மளிகை
சமாசாரங்கள். இத்தனைக்கும் இடையே தன் மகன்,
விடத் துடிக்கும் அடிமனசு ஆசை!

விசாரித்ததில், கடந்த சில ஆண்டுகளை விடவு
கூடுதலாகவே இருக்கிறதென்றும் முக்கியப் பாடங்
பேர் இருக்கிறார்கள் என்றும் தெரிகிறது. இருந்தும் இ
ஓரம் கட்டி பி.ஏ., பி.எஸ்ஸி., பி.காம். என்று 'ரீ
அதிர்ச்சி தரத்தக்க இவ் விஷயத்தைச் சற்றுக் கிளறிப் ப

பொறியியல் என்ட்ரன்ஸ் எழுதி விட்டு, எதற்கு
விடுகிறது எல்லா வருடமுமே வழக்கம்தான் என்
தங்கள் 'பொறியியல் ஆசையை' 'விம்' போட்டு க்

என்ன காரணம்?

பொறியிய
முடிவை அரக
கிறது. தேர்வு
அதிருப்தியால்
'நடந்து' கொ
ஆகஸ்டு இரண்
முதல் வாரத்தி
ஆருடம் சொ
குறித்து, பல்க
குழப்பம் நில
நிலையைப் பற்

பிரச்னை
சென்ற வருட
கள். CBSE மா
பெண்கள் 'அ
இருக்கிறது.

எஞ்சினியர்

* ப்ரியா



முமே வழக்கம்தான்
என்றாலும், இந்த வருஷம்
மாணவர்களில்
பெரும்பாலோர் தங்கள்
'பொறியியல் ஆசையை'
'விம்' போட்டு க்ளீன்
பண்ணியிருக்கிறார்கள்.
என்ன காரணம்?



# அழ வைக்கும் அட்மிஷன் பிரச்னை!

ஷன் நேரத்தில் ஒரு இரண்டு மாதங்களுக்கு காலேஜ்,
வம். அதுவரை சேர்த்து வைத்த சொத்து, கணிசமாகக்
ுத்தான் ஆக வேண்டுமா, படித்து என்ன பெரிசாகக்
டை வைத்தால் உபயோகம்' என்பதான போதிமர
ளை ஒரு இஞ்சினியராகவோ, டாக்டராகவோ ஆக்கி

ஆண்டு +2 மாணவர்களின் தேர்ச்சி சதவீதம் சற்றுக்
் நூற்றுக்கு நூறு வாங்கியவர்கள் மூலைக்கு முப்பது
மாணவர்கள் இம்முறை தொழில்சார்ந்த படிப்புகளை
களை நோக்கி அமோகமாகப் படை எடுக்கிறார்கள்!
ததில் பல 'ஜீபூம்பா'க்கள் எழுந்து குதிபோடுகின்றன!
ருக்கட்டும் என்று ஏதாவது ஒரு கல்லூரியில் சேர்த்து
ம், இந்த வருஷம் மாணவர்களில் பெரும்பாலோர்
பண்ணியிருக்கிறார்கள்.

படிப்புக்கான நுழைவுத் தேர்வு
வரம்பின்றி நிறுத்தி வைத்திருக்
சப்படும் முறையின் மீதான
ார்ட்டில் வழக்கு தொடரப்பட்டு
ருக்கிறது. இந் நிலையில் முடிவு,
ம் வாரம் தெரியும், செப்டெம்பர்
வந்து விடும் என்பதாக அவரவர்
க் கொண்டிருக்கிறார்கள். இது
க் கழக உயர் அதிகாரிகளுக்கே
இருக்கிறது. எனில், மாணவர்
கேட்கவே வேண்டாம்!

ஆணிவேர் எங்கே என்றால்
E முடிவுகளைக் கைகாட்டுகிறார்
ர்களுக்குச் சென்ற வருடம் மதிப்
விடப்பட்டதாக ஒரு குற்றச்சாட்டு

ுக்கு அவசியமான கணிதம், இயற்



பியல், வேதியியல் பாடங்களில் அவர்கள் ஸ்டேட் போர்ட் மாணவர்களை விடவும் அதிக மதிப்பெண்கள் பெற்று வாய்ப்புகளில் முன்னணியில் இருந்ததையும் அதன் பொருட்டு தொடரப்பட்ட வழக்கில், 'இந்த மூன்று பாட பிஸினஸே வேண்டாம்', நுழைவுத் தேர்வு மதிப்பெண்களை மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்வோம்' என்று தீர்ப்பானதும் நாளிதழ் செய்தியாக அறிந்திருக்கலாம்.

போன வருஷம் வழங்கப்பட்ட தீர்ப்பு, அந்த ஒரு வருஷத்திற்கு மட்டுமாக எடுத்துக் கொள்ளப்பட்டதால், இந்த வருஷம் மறுபடி பழைய முறையே கடைப்பிடிப்பது என்று முடிவாகியது. அதாவது, கணிதம், இயற்பியல், வேதியியல் மதிப்பெண்கள் + நுழைவுத் தேர்வு மதிப்பெண்கள். ஸோ, மறுபடி வழக்கு!

இந்த வருஷம், இந்த கேஸ் 'ஃபைல்' ஆனது, நுழைவுத் தேர்வுக்குச் சில நாள் முன்பு. அதனால் சகல ஏற்பாடுகளும் நடந்து



**“ தொழில்நுட்பக் கல்வியில் சேருதலில் உள்ள 'நிச்சயமின்மை' பற்றிய அடிப்படை பயம் மாணவர்களுக்கு ஏற்பட ஆரம்பித்திருக்கிறது. ”**

விட்ட நிலையில் தேர்வை ஒத்திப் போட முடியாததால், முடிவை ஒத்திப் போட்டிருக்கிறார்கள்.

“இப்படி ஒருத்தர் மாற்றி ஒருத்தர் வருஷா வருஷம் கேஸ் போட்டபடி இருந்தால் மாணவர்களின் நிலை என்ன? தொழில்நுட்பக் கல்வியில் சேருதலில் உள்ள 'நிச்சயமின்மை' பற்றிய அடிப்படை பயம் மாணவர்களுக்கு ஏற்பட ஆரம்பித்திருக்கிறது. விளைவு, தொண்ணூறு சதவீதத்திற்கும் மேற்பட்ட மதிப்பெண்கள் பெற்ற மாணவர்களெல்லாம் கலைக் கல்லூரிகளில் தஞ்சம் புக ஆரம்பித்திருக்கிறார்கள்'' என்கிறார் விவேகானந்தா கல்லூரியின் முதல்வர் டாக்டர் தியாகராஜன்.

''சென்ற ஆண்டும் பொறியியல் நுழைவுத் தேர்வு சம்பந்தமாக வழக்கு தொடரப்பட்டு முடிவு வழங்குவதில் கால தாமதம் இருந்திருக்கிறது. அப்போது இல்லாத ஒரு 'பயம்', மாணவர்களுக்கு இந்த வருடம் ஏன் ஏற்பட்டிருக்கிறது?''

''அது முதல் தடவை. இது இரண்டாவது முறை. இப்படியே இந் நிலை தொடருமோ என்ற அச்சம் ஏற்படுவது இயற்கைதானே!''

''அதனால்தான் BSc., பட்டப் படிப்பு வகுப்பில் மாணவர் சேர்க்கை எண்ணிக்கை அதிகமாகியிருக்கிறதா?''

''சேர்க்கை அதிகமாவது சாத்தியமில்லை. இருக்கிற ஸீட்களுக்குத்தானே கொடுக்க முடியும்? ஆனால் வழக்கத்துக்கு விரோதமாக மாணவர்கள் இவ்வாண்டு மிக அதிகமாக BSc., கேட்கிறார்கள். அத்தனை பேரும் நிறைய மதிப்பெண் வாங்கியிருப்பவர்கள்.''

''அதனால் சாதாரணமாக 60, 70 சதவீத மதிப்பெண் பெற்றவர்களுக்கு எப்போதும் போல் ஸீட் கிடைப்பது சிரமமாயிருக்கும் அல்லவா?''

''இன்னொரு விஷயமும் கவனிக்க வேண்டும். 90 சதவீதத்துக்கு மேல் வாங்கியவன் எந்த நிமிஷமும் இஞ்சினீரிங்கோ, மெடிக்கலோ கிடைத்தால் போய் விடுவான். ஆகையால் மிக அதிக மதிப்பெண் பெற்றவர்களுக்கு ஸீட் கொடுக்க யோசிக்க வேண்டியிருக்கிறது.''

''சாதாரண கல்லூரிகளிலும் ஸீட் இல்லை; இஞ்சினீரிங் பற்றி நிச்சயமில்லை என்றால் அந்தப் பையன் அல்லது பெண்ணின் கதி?''

''சங்கடமானதுதான். இருந்தாலும் நாங்கள் அப்படியான மாணவர்களிடம், 'போக மாட்டேன்' என்று வாக்குறுதி வாங்கிக் கொண்டு, பின்னர் ஸீட் கொடுக்கிறோம். வேறு வழி?''

''இந்தப் பிரச்னைக்கு நீங்கள் என்ன தீர்வு சொல்வீர்கள்?''

''மே மாதத்திலேயே எஞ்சினியரிங் நுழைவுத் தேர்வுகளை அரசாங்கம் நடத்தி விட வேண்டும். IIT யில் அப்படித்தானே செய்கிறார்கள்?''

ஆக, என்ட்ரன்ஸ் எழுதுவதற்கான குறைந்தபட்ச தகுதி நிர்ணயிக்க +2 மார்க் தான் அடிப்படை என்பதால் +2 ரிசல்ட் தாமதப்படாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

டாக்டர் தியாகராஜன் கூற்று இப்படியாக இருக்கிறதென்றால், டான்பாஸ்கோவில் ப்ளஸ் டூ முடித்து, இஞ்சினீரிங் என்ட்ரன்ஸ் எழுதி, காத்திருக்கும் ராபர்ட் ரவி வேறு மாதிரி சொல்கிறார்.

''என்ட்ரன்ஸ் மார்க் மட்டும் எடுத்துக் கறதே நல்லது சார்! +2 எக்லாம் எவ்வ ளவுதான் நல்லா எழுதியிருந்தாலும், நிறைய மார்க் வர்றது 'லக்'கைப் பொறுத் தது. நல்லாப் படிக்கிறவனுக்கே சில சமயம் மார்க் குறைஞ்சுடுது. காரணம் புரியற தில்லை. என்ட்ரன்ஸ் மார்க் மட்டும்னா குழப்பமே இல்லை. திறமைக்கு ஏத்த மார்க், ஸீட்! இதையே நிரந்தரமாக்கிட்டா எதிர்காலத்திலும் பிரச்னையில்லை!''



“அப்ளிகேஷன் ஃபார்ம் வாங்கப் பணம் இல்லை சார்! அப்ளிகேஷன் மட்டுமே அம்பது, அறுபது ரூபா ஆவுது...”

மேலும் பேசியதில் ராபர்ட் ரவி ஒரு மீனவக் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று தெரிந்தது. இஞ்சினீரிங் காலேஜுக்கு மட்டுமே விண்ணப்பித்து, வேறு எந்த கல்லூரிக்கும் விண்ணப்பிக்கவில்லை என்று அவர் சொன்னது வியப்பாக இருந்தது.

''ஒருவேளை இஞ்சினீரிங் கிடைக்கா விட்டால்?''

''எண்பத்தி நாலு பர்ஸென்ட் சார்! என்ட்ரன்ஸ் நல்லா பண்ணியிருக்கேன். கிடைச்சுடும்ன்ற நம்பிக்கைதான்.''

''எதற்கும் வேறு கல்லூரிகளில் அப்ளை பண்ணி வைக்கலையா...?''

''வெச்சா நல்லதுதான்! அப்ளிகேஷன் ஃபார்ம் வாங்கப் பணம் இல்லை சார்! ஒவ்வொரு காலேஜுக்கும் அப்ளிகேஷன் மட்டுமே அம்பது, அறுபது ரூபா ஆவுது. நாங்க ரொம்ப சாதாரண ஃபேமிலி. அதெல்லாம் சாத்தியமேயில்லை! ஒரு வேளை இந்த வாட்டி ஸீட் கிடைக்காட்டா அடுத்த வாட்டி பார்க்க வேண்டியதுதான்!''

விருதுநகரில் படித்து 91% வாங்கி யிருக்கும் ரமணக்கண்ணன் நிலையும் இது தான். ''தலையெழுத்துங்க! இவ்ளோ மார்க் வாங்கி என்ன பிரயோசனம்? என்ட்ரன்ஸ் என்ன ஆகுமோ, தீர்ப்பு என்ன ஆகு மோன்னு தினமும் பகீர் பகீர்னு இருக்குது. மத்த காலேஜ்கள்ல அப்ளை பண்ண வசதி இல்லை. டொனேஷன் கேப்பாங்க. யாரால முடியுது? எங்கப்பா ரிடையர்டு டீச்சர். மெரிட் இருக்கு என்கிட்டே. இஞ்சினீரிங் கிடைச்சிட்டதுன்னா படிக்கலாம். இல் லைன்னா ஓப்பன் யூனிவர்ஸிட்டி, கரஸ் பான்டன்ஸ்ல பி.ஏ., பி.எஸ்ஸி., ஏதாவது பண்ண வேண்டியதுதான்!''

''ஏன்தான் ஃபார்வர்டா பிறந்தோம்னு இருக்குங்க!'' - இது ஆவிச்சி மேநிலைப் பள்ளியில் 81% எடுத்து விட்டு ஏ.எம்.ஜெயி னில் ஒரு வாரமாக அலைந்து கொண்டிருக் கும் கே.கே. வெங்கட்ராமனின் சோகம்.

''அம்பது, அறுபது பர்ஸென்ட் எடுத்து, பேக்வர்டா இருந்தா ஈஸியா இஞ்சினீரிங் கிடைச்சுடும்னு நம்பிக்கையா இருந்துட லாம். நான் எண்பது பர்ஸென்ட் எடுத்தா லும் சந்தேகம்தான். பிஸிக்ஸ்ல 190 வரும்னு எதிர்பார்த்தேன். அவ்ளோ நல்லா பண்ணி யிருந்தேன். ஒரேடியா 'குறிச்சி'ட்டாங்க! என்ட்ரன்ஸ் மார்க் வெச்சி ஸீட்டுன்னா ஜாலி! என்ட்ரன்ஸ் நல்லா பண்ணியிருக் கேன். கிடைக்காட்டா என்ன பண்றதுன்னு, ரெண்டு மூணு காலேஜ்ல அப்ளை பண்ணி யிருந்தேன். இவங்ககிட்டே ஸீட் வாங்கற துக்குள்ளே உயிரே போயிடும் சார்! இன் னும் எங்கியுமே அட்மிட் கார்டு வரலை. அதான் அலைஞ்சிட்டிருக்கேன்.''



“நன்றாகப் படிக்கிற மாணவர்களுக்கு நடைமுறைச் சிக்கல்களால் ஆர்வம் குறைந்து போகும்...”

''நன்றாகப் படிக்கிற மாணவர் களுக்கு இது மாதிரியான நடைமுறைச் சிக்கல்களால், அவர்கள் படிப்பு ஆர்வமே குறைந்து போகும் வாய்ப்பு உள்ளது'' என் கிறார் ஒரு தனியார் நிறுவன உயர் அதிகாரி ராமன். 89.5% மார்க் வாங்கியுள்ள தன் மக ளுக்குக் கஷ்டப்பட்டு இடம்பிடித்து விட்ட பெருமிதத்துடன் பேசினார்.

## அடுத்த இதழில்.....



● அது ஒரு தனி உலகம்!

– ஒரு ஜாலி ரிப்போர்ட்

● கபிலுக்கு வந்த கால்வலி காணாமல் போனது எப்படி..?



''இன்ஜினீரிங் கிடைக்கிறதோ இல்லையோ - இந்த கலைக் கல்லூரிகளில் சேர்க்கிற 'விளையாட்டு' இருக்கிறதே... போதுமடா சாமி! என் பெண் நல்ல மார்க்தான். இருந்தாலும் அப்ளை பண்ணியிருந்த பல கல்லூரிகளிலிருந்து பதிலே வரவில்லை. எப்படியோ முண்டியடித்து ஒரு கல்லூரியில் சேர்த்து விட்டேன். இனி என்ட்ரன்ஸில் செலக்ட் ஆனால் மறுபடி மாற்றிக் கொள்ளலாம்.''

சமீபத்தில் B.Sc., கம்ப்யூட்டர் சயன்ஸ் சேர்ந்திருக்கும் ப்ரியாவுக்கு இதெல்லாம் ஒரு பிரச்னையாகவே தெரியவில்லை. ''நம்ம கடமை படிக்கணும். படிச்சாச்சு. மார்க் வாங்கியாச்சு. தட்ஸ் ஆல். இஞ்சினீரிங்... ஆசைதான். கிடைச்சாப் படிக்கலாம். இல்லாட்டா கிடைக்கறதை ஒழுங்காப் படிக்கணும். என்ட்ரன்ஸ் நல்லாத்தான் பண்ணியிருக்கேன். பார்ப்போம்.''

இப்படியான 'புத்தர் தன்மை' வாய்க்கிற மாணவர்கள் மிகக் குறைவு. ப்ரியா இப்படியென்றால் 90% எடுத்து விட்டு வைஷ்ணவா கல்லூரியில் B.Sc சேர்ந்திருக்கும் ராமலட்சுமி வேறு ரகம். கண் நிறைய கங்கை.

''என்ன படிச்சி என்ன பிரயோஜனம்? என் லட்சியமே இஞ்சினீரிங்தான். அவங்க என்னிக்கு கேஸ் முடிச்சி, என்னிக்கு ரிஸல்ட் அனௌன்ஸ் பண்ணி, அதுல நம்ம பேர் வந்து... அப்படியே கிடைச்சாலும் ஒரு காலேஜ் விட்டு இன்னொண்ணுக்குப் போகணுமானா என்ன செலவு? நம்மை மாதிரி மிடில் கிளாஸ்காரங்களால எப்படி சமாளிக்க முடியும்? 'கிடைச்சிடும்'னு நம்பி வேற எங்கியும் ஜாயின் பண்ணாம இருக்கவும் முடியல. இப்ப காலேஜ் சேர்ந்துட்டனே தவிர படிப்பில் மனசே போகலை! இவ்ளோ நாள் கஷ்டப்பட்டதெல்லாம் வேஸ்டோன்னு தோணுது!''

இத்தனை கேள்விகளுக்கும், கொதிப்புகளுக்கும், குமுறல்களுக்கும் அரசு என்ன பதில் சொல்லப் போகிறது? பொறியியல், மருத்துவம் உள்ளிட்ட 'பணிசார்ந்த' படிப்புகளுக்கான தேர்வு முடிவுகள் வழக்கின் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கிற நிலையில் வழக்கு சீக்கிரம் முடிந்தாலொழிய இவ்வாண்டு இப் பிரச்னைக்கு வேறு வழியில்லைதான். ஆனால் போன வருஷம் ஒன்று, இந்த வருஷம் ஒன்று என்பதாக இல்லாமல், நிரந்தரமாக ஒரு கொள்கை வகுத்து, அதன்படி நடந்து கொண்டு, இதற்கொரு முடிவான தீர்வு காணும் ஆர்வமாவது அரசுக்கு இருக்கிறதா?

– கிச்சா

வண்ணப்படங்கள், படங்கள் :
கோபிநாத்

# COCK BRAND FILE




TRADE MARK

தங்கள் முன்னேற்றத்தில்
உற்ற தோழன்... 1947 முதல்

- TAG FILE
- LEVER FILE
- CLIP FILE
- FIBRE BOARD FILE

**தயாரிப்பாளர்கள்**

## MUTHUVEL INDUSTRIES

Angappa Chettiar Industrial Complex,
20.A, Round Road, Post Box No.32,
Dindigul - 624 001. Tamil Nadu.
✆ : 5260 & 7637 R: 5643 & 3726

**டெப்பாசிட்கள் ஏற்றுக் கொள்ளப்படும்**

ஆண்டுக்கு வட்டி விகிதம்

# 24%

குறைந்தபட்ச டெப்பாசிட் : ரூ.1000
குறைந்தபட்ச காலம் : 12 மாதங்கள்
மாதம்தோறும் வட்டி அனுப்பப்படும்.

## CUMULATIVE DEPOSIT

தங்கள் முதலீட்டை 3 ஆண்டுகளில்
இருமடங்காக பெறுங்கள்

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை ரூ. | வருடாந்திர வரவு சதவிகிதம் |
|---|---|---|
| 12 | 1260 | 26.00 % |
| 24 | 1587 | 29.35 % |
| 36 | 2000 | 33.33 % |
| 48 | 2520 | 38.00 % |
| 60 | 3175 | 43.50 % |

டெப்பாசிட் தொகை: ரூ.1000 அதற்கு மேலும்

VINOD-BODI




ஐ லக் இட்!

For Details Contact:
**SRI VENKATADRI ENTERPRISES**
Flat 14, 250, Lloyds Road, Madras-86. Ph: 8276807

TAS Vision ● 027

# பாலம்

●● வ டி வே லு செட்டியார் எழுதிய ''கை வல்ய நவநீதம்'' என்ற புத்தகம் தேவை. வைத்திருப்பவர்கள் விலை குறிப்பிட்டு எழுதினால் பெற்றுக் கொள்கிறேன்.

– எஸ்.பி. முருகேசன்,
68, பங்காளி தெரு,
உறையூர், திருச்சி – 620 003.

●● D.A.E. முடித்திருக்கிறேன். நேரடி பயிற்சி பெற ஆர்வம். உதவித் தொகை இல்லாமலும் பயில விருப்பமே. சம்பந்தப் பட்ட நிறுவனங்கள் உதவ வேண்டுகிறேன்.

– எம். முரளி,
16, 2வது குறுக்கு சாலை,
கோபால் ரெட்டி காலனி,
சென்னை – 600 082.

●● '59-60' களில் நெருங்கிய நண்பராக இருந்த ஜெயராமன் இப் போது எங்குள்ளார்? (அன்று மணல்மேடு சப்-இன்ஸ்பெக்டர் மகன்) மீண்டும் சந்திக்க ஆவல்.

– கே. நவநீத கிருஷ்ணன்,
9/E4 பாலகிருஷ்ணன் தெரு,
சென்னை – 600 033.

●● பலா மரத்தில் செய்யப்பட்ட தரமான நல்ல கரமுள்ள மூன்று வீணைகள் விற்பனைக் குத் தயார். வேண்டுவோர் தொடர்பு கொள்ள முகவரி :

– திருமதி பி. சாந்தகுமாரி,
27, ஜவுளி செட்டி தெரு,
தெற்கு மெயின் வீதி,
தஞ்சாவூர்.

●● போட்டோ ஸ்டுடியோவில் கிடைக்கும் ஹைப்போ நீரிலிருந்து வெள்ளியை எடுக்கும் தொழில் நுட்பம் தெரிந்தவர் உதவி தேவை.

– ஆர். சங்கரநாராயணன்,
தேவி டெக்ஸ்டைல்ஸ்,
அண்ணா நெடுஞ்சாலை,
பம்மல், சென்னை – 600 075.

●● தீப்பெட்டி தொழில் ஆரம்பிக்க உத்தேசம். இயந்திரங்கள் மற்றும் மூலப் பொருள்கள் பற்றிய விவரங்கள் தெரிவிக்க வேண்டுகிறேன். முதலீடு எவ்வளவு தேவைப் படும்?

– இரா. பாலசந்தர்,
மேல்புதுப்பாக்கம்,
(வழி) வாழைப்பந்தல் – 632 318.

●● ஆயில் பெயின்ட் ஓவியங்கள் வரைய ஆசை. இக் கலை அறிந்தவர்கள் எனக்கு அதைப் பற்றிய தகவல்கள் அல்லது புத்தகங்கள் தந்து உதவவும்.

– மு. விஜயபாஸ்கர்,
D-44, மேற்கு விஸ்தரிப்பு,
8வது குறுக்குச் சாலை,
தில்லை நகர், திருச்சி – 620 018.

●● புலவர் குழந்தை எழுதிய தொடையதிகாரம் எனும் நூல் ஓர் ஆய்வுக்காகத் தேவைப் படுகிறது. வைத்திருக்கும் அன்பர்கள் தெரியப்படுத்தினால் உரிய தொகை செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

– மு. ரவிச்சந்திரன்,
19–ஏ, அந்தோணிசாமி தெரு,
சாமிநாதபுரம், சேலம் – 636 009.



●● லஞ்சமுண்ட கீரை - வெற்றிலை போலி ருக்கும்; உட்பகுதியில் வெள்ளை நரம்புகள் ஓடும் - அவசியம் தேவைப்படுகிறது. இருக்குமிடம் தெரிவித்தால் நேரில் வந்து பெற விருப்பம்.

– எம். சீனிவாசன்,
4, கந்தசாமி குப்தா தெரு,
தர்மபுரி – 636 702.

●● கணவன் - மனைவி இருவரும் வேலைக்குப் போகிறோம். சென்ற ஆண்டு ஒரு விபத்தில் என் வலது கை மிகவும் பாதிக்கப்பட்டு விட்டது. குழந்தைக்கு இடது காலில் அடி. என் தாயிடம் குழந்தை வளர்ந்து வருகிறான். அவனைப் பிரிய மன மில்லை. குழந்தையிடம் பிரியம் காட்டி வீட்டு வேலைகளிலும் உதவக்கூடியவர் தொடர்பு கொள்ளவும்.

– நா. கமதி,
2A, டைப் II குவார்ட்டர்ஸ்,
பிளாக் – 4, நெய்வேலி – 607 803.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பேற்க இயலாது. - ஆர்.)

# கோகுலம்

*** இயக்குனர் விக்கிரமனுக்கு - இரண்டாவது வசந்தம்!**



சிக்கல் இல்லாத சீரான கதை.
★ குற்றால அருவியாய் குளுகுளு உணர்வை உண்டு பண்ணும் இசை.
★ அளவான - இயல்பான வசனங்கள்.
★ கட்டுக்கோப்புடன் அடுக்கடுக்காய் மடலவிழும் நிகழ்ச்சிகள்.
★ குறைந்த அளவிலேயே இடம்பெறும் ஃபார்முலா மசாலா.
★ அடக்கி வாசிப்பதோடு தன்னுடைய நடிப்புத் திறனின் விளிம்பைத் தொட்டுக் காட்டும் பானுப்ரியா.
★ உணர்வுகளைச் சரளமாக வெளிப்படுத்தி மனத்தில் இடம் பிடித்து விடும் ஜெயராம் - கேரளத் திரையுலகிலிருந்து, வரவேற்கத் தக்க இறக்குமதி.
★ கௌரவ நடிகராக அர்ஜுன் - ஃப்ளாஷ்பேக்கில்தான் வந்து போகிறார் என்றாலும் நடிப்பில் முன்னிலைப் பட்டு நிற்கிறார்.
★ வில்லனோ என நினைக்கச் செய்து நல்லவராகவே நடந்து கொள்ளும் ஜெய்சங்கர் - மற்றுமொரு கௌரவ நடிகர்.
★ வாய்விட்டுச் சிரிக்க வைக்கும் சின்னி ஜெயந்த் - வடிவேலு. பக்க பலம் : தெளிவு கனிவுடன் பயன்படுத்தப்பட்டுள்ள தமிழ்த் திரையுலகின் பிரபலமான பாடல்கள்.
★ நெஞ்சின் வேதனைகளைத் தன் பார்வைகளாலேயே கொட்டி விடும் கல்யாண்குமார் - அடக்கமான வாசிப்புக்கு மற்றுமொரு உதாரணம்.
★ கண்கவர் லொக்கேஷன்கள்.
★ கச்சிதமான முடிவு.
★ மன்னிக்கப்படக் கூடிய மைனஸ் பாயிண்ட்டுகள்.

– சி. ஆர். கே.

## 27. வல்லவனுக்கு வல்லவன்

தஞ்சை அரண்மனையில் சோழ இளவலின் எதிரில் அந்த வீரர்கள் நின்றிருந்தனர். கால்வாயில் குதித்த மார்க்கியனைத் தொடர்ந்த அவர்கள் அவன் அந்த அடர்ந்த வனப் பகுதிக்குள் ஓடி விட்டதாலும், ஏற்கெனவே இடப்பட்டிருந்த உத்தரவின் காரணமாகவும் அந்தப் பகுதியைக் கண்காணிக்க வீரர்களைக் குறைவாகவே நிறுத்தி விட்டுத் திரும்பியிருந்தனர். விவரங்களைக் கேட்டுக் கொண்ட இளவல், ஒரு வீரனை மட்டும் படகிருந்த இடத்தில் சற்று மறைவிலிருந்து கண்காணிக்க உத்தரவிட்டான். மற்றவர்களை அவர்களுடைய பாசறைக்கு அனுப்பியவன், வீரர்களின் தலைவனை மட்டும் தன்னுடன் அழைத்துக் கொண்டு தனது அறைக்குத் திரும்பினான்.

அறைக்குள் வந்ததும், ''உனக்கொரு முக்கியமான பணி காத்திருக்கிறது வீரனே'' என்றான்.

''உத்தரவிடுங்கள் இளவரசே'' பதில் துடிப்புடன் வந்தது.

ஓலைக்குழலொன்றை எடுத்து நீட்டினான் விக்கிரமன். அதிலிருந்த பெயரைக் கண்டதும் அந்த வீரனின் முகத்தில் பிரமிப்பு படர்ந்தது. ''இவரா... இவரையா நான் சந்திக்க வேண்டும்?''

விக்கிரமன் முகத்தில் முறுவல் விரிந்தது. ''ஆம். ஆனால் நீ நினைப்பது போல் இவர் தொலைதூரத்தில் இல்லை. மல்லைத் துறைக்கு அருகில் இவரைச் சந்திக்கலாம். ஏற்கெனவே நான் அனுப்பிய ஓலையிலிருந்த திட்டத்தைச் செயல்படுத்தும் தருணம் வந்து விட்டது என்று சொல். மன்னரிடமிருந்து மறு உத்தரவு வரும் வரை கடலிலேயே சஞ்சரிக்கலாமென்றும் சொல்'' என்றான் விக்கிரமன்.

அந்த வீரனுக்கு விஷயம் முழுவதுமாக விளங்காவிட்டாலும், சந்திக்கப் போகும் மனிதரைப் பற்றிய நினைவால் ஏற்பட்ட பெருமிதத்துடன் வணங்கி விடைபெற்றவன் அப்பொழுதே கிளம்பினான். வீரனின் துடிப்பைக் கவனித்த இளவலின் முகத்தில் முறுவல் இன்னும் விரிந்தது.



புதை மணலும் கொடிய விலங்குகளும் நிறைந்திருந்த அந்த வனத்தில் பறவைகளின் கூச்சலும் மிருகங்களின் உறுமல்களும் கலந்து ஒலித்தன. ஒற்றை நரியொன்று நீண்ட குரலில் ஒரு ஆலாபனை செய்தது. தொடர்ந்து பல நரிகள் ஓலமிட்டன. அச்சம் என்பதையே அறியாதவன்தான் மார்க்கியன். ஆனாலும் ஆரண்யத்தில் இருள் கவியத் தொடங்கிய அந்தச் சூழலில் அந்த ஓலங்களைக் கேட்டு அவன் உடல் சிலிர்த்தது.

சோழ வீரர்கள் தன்னைத் தொடர்வதை விட்டு விட்டார்கள் என்பதை அவனால் நம்ப இயலவில்லை. சோழர்கள் புலிகள். எத்தனை நேரமானாலும் இரை வெளியே வந்து சிக்கும்வரை பொறுமையாக நிழலில் காத்திருக்கும் வேங்கைகள். இரண்டாவது நாளாக வனத்தினுள் சுற்றித் திரிந்தவனுக்குக் காவலர் நடமாட்டம் மெய்யாலுமே குறைந்து விட்டதாகப்பட்டது. கவனமாக நடந்தவன் படகு கட்டி வைக்கப்பட்டிருந்த இடத்தை அடைந்து அது தான் விட்டுச் சென்ற நிலையிலேயே கிடப்பதைக் கண்டு திருப்திப்பட்டுக் கொண்டான்.

இரண்டு தினங்களாக வனத்தில் சரியான உணவின்றிச் சுற்றியவனுக்குக் கீழ்த்தளத்திலிருந்த உணவும் நீரும் சோர்வை அகற்றி புதிய தெம்பைக் கொடுத்தன. கால்களை நீட்டி அங்கேயே படுத்தவன் சற்றுக் கழித்து பிணைக் கயிற்றை அவிழ்த்து, படகை நீரின் போக்கிலேயே கடல் நோக்கிச் செல்ல விட்டான். எடுத்துக் கொண்ட பணி ஒன்று வாழ்க்கையில் முதன் முறையாகத் தோல்வியுற்றதைப் பற்றி அவன் மனம் சிந்தித்தது.

படகு கண் பார்வைக்கு மறைந்ததும் மறைவிலிருந்து வெளியே வந்த சோழ வீர

னொருவன் தனது பெரும் வில்லில் எரியம்பு ஒன்றைப் பொருத்தி வானத்தை நோக்கிப் பறக்க விட்டான். வெகு தூரம் உயரே சென்ற அந்த எரியம்பு யாருக்கோ சமிக்ஞை செய்து விட்டு வனத்தில் இறங்கி மறைந்தது.

**கா**ல்வாய் கடலில் கலக்குமிடத்தில் கொந்தளித்த அலைகளைத் துடுப்புக்களால் சமாளித்த மார்க்கியன் துறைமுகத்துக்கு நேர் எதிர்த் திசையில் படகைச் செலுத்தினான். அவனுக்கு நேர் எதிரில் தூரத்தில் பெரும் விளக்குகளுடனும் உயர்ந்த பாய் மரங்களுடனும் நான்கு மரக்கலங்கள் நிலவொளியில் வரையப்பட்ட சித்திரங்களாக ஒய்யாரமாக ஆடி ஆடி வந்து கொண்டிருந்தன. இந்தக் கலங்களுள் ஒன்றில் பயணப்பட அனுமதி கிடைக்குமானால் சோழ நாட்டில் அவனுக்கு இருந்த அபாயங்களிலிருந்து தப்பி விடலாம் என உணர்ந்தவன், துடுப்புக்களை விரைவாகப் போட்டுக் கலங்களை நெருங்கினான்.

கலத்தின் மேல்தளத்தில் வீரர்கள் நடமாட்டம் அதிகரிப்பது தெரிந்தது. மேலிருந்து நூலேணி ஒன்றும் தொங்க விடப்பட்டது. துடுப்புக்களைப் படகில் எடுத்துப் போட்ட மார்க்கியன் வாளொன்றைத் தரித்துக் கொண்டு சரசர வென்று நூலேணியில் மேலேறி தளத்தில் குதித்தான். அபாயத்திலிருந்து மீண்டதால் மந்தகாசத்துடன் இரண்டடி எடுத்து வைத்தவனது முகம் திக்பிரமையில் உறைந்தது. சுற்றி நின்ற வீரர்கள் உருவிய வாளுடன் அவனை நெருங்கினர்.

தளத்தின் மறுபுறத்திலிருந்து யாரோ ஒருவன் வெகு நிதானமாகவும் திடமாகவும் கால்களைப் பதித்து நடந்து வருவது தெரிந்தது. வீரர்கள் விலகி வழி விட்டனர்.

ஆஜானுபாகுவான அராபியன் ஒருவன் உடன்வர, வந்தவனது திடமான சரீரத்தையும் மார்பில் புரண்ட பெரும் மாணிக்கத்தையும், ஒற்றைக் காதில் தொங்கிய குண்டலத்தையும் கண்ட மார்க்கியன் முகத்தில் சந்தேகச் சாயை பலமாகப் படர்ந்தது.

இருளிலும் கூர்மையாகப் பளிச்சிட்ட அந்த மனிதனின் விழிகளில் விஷமம் சொட்டியது. அவன் பெருமீசையும் ஒரு புறம் இழுபட்டது.

''எங்கள் கலத்திற்கு மார்க்கியரின் வரவு நல்வரவாகட்டும்.''

## ஹஷ்வக்சேனின்

நிச்சயம் இவன் ஈழத்தைச் சேர்ந்தவனல்ல என்று புரிந்து கொண்ட மார்க்கியன், தன் வாளை உருவியபடி, ''யார் நீ?'' என்று இரைந்தான்.

அந்த மனிதனின் பதில் வெகு நிதானமாகவே வந்தது. ''நான் இந்தக் கலத்தின் தலைவன். பெயர் கருணாகரப் பல்லவன்.''

மார்க்கியன் உறைந்து போய் நின்றான்.

அதுவரை அமைதியாக நின்றிருந்த அந்த அராபியன் இப்போது மார்க்கியனை உற்றுப் பார்த்தபடி நெருங்கினான்.

**பா**தி வெட்டப்பட்ட வெள்ளித் தட்டாக நிலவு வான்வீதியில் மெல்ல ஊர்ந்து கொண்டிருந்தது. சூறாவளி வீசியதால் ஏற்பட்ட விளைவுகளைக் காண அஞ்சியதாலோ என்னவோ அது மேகப் போர்வையை அவ்வப்போது இழுத்து முகத்தை மூடிக் கொள்ள முயன்று கொண்டிருந்தது. நான்கு தினங்களாக ஈழத்தை அலைக்கழித்த சூறாவளி ஓய்ந்து போனாலும் அது கடந்து சென்ற பாதையை எவ்வளவு சீர்குலைக்க முடியுமோ அவ்வளவு சீர்குலைத்துச் சென்றிருந்தது. தென்னையும் பாக்கும் பிற மரங்களும் சாய்ந்து கிடக்க, திடீரென்று ஏற்பட்ட காட்டாறுகளில் ஆடு மாடுகளும், கூரைகளும், ஓரிரு மனித சடலங்களும் கூட மிதந்து கடலை நோக்கிச் சென்றன. கடலோரத்து மாளிகையை விட்டு வெளியே செல்ல வழியின்றி அடைந்து கிடந்த மாறவர்மன் அடியோடு பொறுமையிழந்து போயிருந்தான்.

வந்து பேசுவதாகக் கூறியிருந்த ஈழத்து இளவரசன் பராக்கிரமபாகு மழை ஓய்ந்து இரு தினங்களாகியும் வராததால் நிதானத்தை இழந்து போயிருந்த மாறவர்மனுக்கு, மக்களின் அவதியை நீக்கும் பொறுப்பு அவனுக்கு இருக்கும் என்ற எண்ணம் கூட ஏற்படவில்லை. இரவு முழுதும் சிந்தனையிலேயே கழித்த மாறவர்மனுக்கு, ஏன் தானே சென்று இளவரசனைக் காணக் கூடாது என்று தோன்றியது.

தான் எடுக்கும் எந்த முடிவையும் உடனடியாக அங்கீகரிக்காத மார்த்தாண்டனுடனோ, சோமசுந்தரனுடனோ இது பற்றி விவாதிப்பதில் பயனேதுமில்லையென்ற முடிவுக்கு வந்தவன், தன் வாளை எடுத்துக் கச்சையில் செருகிக் கொண்டு மாளிகையின் பின்புறத்தை அடைந்தான்.

புரவியை அவிழ்த்துத் தாவி ஏறினான். தலைநகரை நோக்கிச் செல்லும் பாதையில் குறுக்கே கிடந்த கிளைகளையும் மரங்களையும் கடந்து செல்வது கடினமாக இருந்தது. விடியும் நேரத்தில் தலைநகரை அடைந்து, வீரர்களால் வாயிலிலேயே தடுத்து நிறுத்தப்பட்டான். நீண்ட விவாதத்திற்குப் பின் அவனை உள்ளே அனுமதித்த காவலர்கள், அவன் உருவம் மறைந்ததும் ''பாண்டிய இளவரசனாம் இளவரசன்'' என்று சலித்துக் கொண்டனர்.

**வி**டிகின்ற அந்த வேளையிலும் அரண்மனையை அடுத்துப் போடப்பட்டிருந்த பந்தல்களில் வெள்ளத்தில் தவித்து மீண்ட மக்களிடையே உலவி, நோயால் அவதிப்பட்டவர்களுக்கு மூலிகைகளும், குழந்தைகளுக்கு உணவும், மற்றவர்களுக்கு உடையும் புத்த பிக்ஷுக்களும் அரண்மனை அதிகாரிகளும் அளித்துக் கொண்டிருப்பதைக் கண்ட மாறவர்மன் அவர்களின் கடமை உணர்வை வியந்தாலும் பாராட்டும் மனமின்றிக் குமைந்தான்.

அரண்மனையின் வாயிலில் மீண்டும் தடுத்து நிறுத்தப்பட்ட மாறவர்மன் எரிச்சலில் வெடித்தே போயிருப்பான். யாருடைய நல்ல காலமோ, அவனை அறிந்திருந்த அரண்மனை ஸ்தானிகர் அங்கு விரைந்து வரவும் ஏற்பட இருந்த வாக்குவாதம் தவிர்க்கப்பட்டது.

''ஸ்தானிகரே, எங்கே உமது மன்னர்? எத்தனை நாட்கள் நாங்கள் இங்கே கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பது? பாண்டிய நாட்டின் போர் ஏற்பாடுகளை யார் கவனிப்பது?'' என்று இரைந்தான் மாறவர்மன்.

''இளவரசர் சற்று பொறுமையாயிருக்க வேண்டும். மக்கள் படும் அவதியைக் கண்டீர்களல்லவா?'' என்ற ஸ்தானிகர், தமது கேள்வி அவன் கோபத்தை இன்னும்

கிளறுவதைக் கண்டு, ''சரி சரி உள்ளே வாருங்கள். இன்று மாலைக்குள் எப்படியும் அரசரைக் காண ஏற்பாடு செய்கிறேன்'' என்றார்.

மாறவர்மனை அரண்மனையின் ஓர் அறையில் தங்க வைத்தவர் காவலர்களிடமும் பணியாட்களிடமும் எச்சரித்தார். ''உள்ளே இருப்பவன் சரியான முன்கோபி. அனாவசியமாகப் பேச வேண்டாம். எச்சரிக்கை!'' என்றவர் அரசரை நாடிச் சென்றார்.

அரண்மனையில் நீராடி காலை உணவருந்தி முடித்துக் கொண்ட மாறவர்மன் மெல்ல உலவ ஆரம்பித்தான். ஸ்தானிகரின் எச்சரிக்கையால் அவனைக் கண்டதும் காவலர் சற்று விலகியே நடந்தனர். தனது பிரபாவமும் இளவரசியுடன் நடக்கப் போகும் திருமணச் செய்தியும் அறிந்ததால் தான் காவலர் பணிவுடன் விலகி நடக்கிறார்கள் என்று எண்ணிக் கொண்டான் மாறவர்மன்.

**உ**லவியபடியே அசட்டையாக வந்தவன், ஒரு திருப்பத்தில் தன் மீது யாரோ மோதியதால் தடுமாறி விழப் போனான். இரும்பிலும் வலிய கரம் ஒன்று அவனைக் கீழே விழாமல் பிடித்து நிறுத்தியது. எதிரில், இவனை விட அதிக உயரத்துடனும், இரும்புச் சலாகை போன்ற பரந்த மார்புடனும் நின்றிருந்த ஈழத்து இளவரசன் பராக்கிரம பாகு, வாள் வடுக்கள் தென்பட்ட வலிய கரங்களால் இவனைப் பிடிக்க, அதனால் ஏற்பட்ட வலியால் முகம் சுளித்த மாறவர்மன், ''போதும் விடு என்னை'' என்று கைகளை உதறி, தன்னை விடுவித்துக் கொண்டான்.

''பாண்டிய இளவலுக்கு என் வணக்கம்'' என்று வணங்கிய பராக்கிரமபாகு உண்மையில் வணங்குகிறானா இல்லை தன்னை ஏளனம் செய்கிறானா என்றே மாறவர்மனுக்குப் புரியவில்லை. எதிரில் நின்றவனின் உடையும் முகத்தில் தெரிந்த ராஜகளையும், அவன் இடையில் தொங்கிய பெரும் வாளும் அச்சத்தை ஏற்படுத்தின.

''நீங்கள் யார்?'' என்றான் மாறவர்மன்.

''நான் ஈழ அரசரின் முதல் மகன், பராக்கிரமபாகு'' என்று தன்னை அறிமுகம் செய்து கொண்டவன், ''வாருங்கள், உள்ளே அமர்ந்து பேசுவோம்'' என்றான்.

திகைத்து நின்ற மாறவர்மன் சுதாரித்துக் கொண்டு பராக்கிரமபாகுவைத் தொடர்ந்தான். திடீரென்று ஏற்பட்ட இந்தச் சந்திப்பு அவன் சித்தத்தைக் குழப்பியிருந்தது. பராக்கிரமபாகு உதவுவதாக மார்த்தாண்டன் கூறியது நினைவுக்கு வரவே, மனத்தைத் திடப்படுத்திக் கொண்ட மாறவர்மன், பராக்கிரமபாகு காட்டிய ஆசனத்தில் சற்று கம்பீரத்துடனேயே அமர்ந்தான்.

சுவரிலும் மேற்கூரையிலும் தீட்டப்பட்டிருந்த அழகிய சித்திரங்களையும், தூண்களில் செதுக்கப்பட்டிருந்த சிறிய சிற்பங்களையும் கண்டு பிரமித்த மாறவர்மன் மதுரை அரண்மனையின் சிற்பங்களையும் சித்திரங்களையும் நினைத்துக் கொண்டான். 'என்று அவை தன்வசப்படப் போகின்றன?' என ஒரு ஏக்கமும் பெருமூச்சாக எழுந்தது.

அவன் பார்வை படிந்த இடங்களையும் அவன் பிரமிப்பையும் கவனித்த பராக்கிரமபாகுவின் முகத்தில் முறுவல் படர்ந்தது.

''உங்கள் தமிழகத்து அரண்மனையிலும் கோயில்களிலும் உள்ள சித்திரங்களையும் சிற்பங்களையும் விட இவை ஒன்றும் சிறப்பாக இருக்காது. இருந்தாலும் எங்களால் இயன்ற வரையில் செய்திருக்கிறோம்'' என்றான் பராக்கிரமபாகு.

**சு**ற்றி வளைத்துப் பேசிக் கொண்டிருப்பதை விரும்பாத மாறவர்மன் நேரிடையாகவே பராக்கிரமபாகுவை வினவினான் :

''ஈழத்து இளவரசே, உங்கள் தண்டநாயகர் சேர நாட்டில் எங்களிடம் திருமணத்தைப் பற்றியும் படை உதவியைப் பற்றியும் கூறினார். ஆனால் பிறகு எங்களிடம் பேசுவதையே தவிர்த்து விட்டுத் திரும்பி விட்டார்.''

பராக்கிரமபாகுவின் முகத்தில் சிந்தனை படர்ந்தது. தானும் நேரடியாகப் பதிலளிக்க நினைத்தவன், ''மாறவர்மரே, போரில் நான் கண்டிப்பாக உதவுகிறேன். ஆனால் அதற்கு முன் எனக்குச் சில விஷயங்களைத் தெளிவாக்க வேண்டும்.''



## அருள்வாக்கு

நமஸ்காரம்தான் நமக்கு மஹா பெரிய செல்வம். ஆசார்யாள் அப்படித்தான் சொல்லியிருக்கிறார்.

அவர் பால ப்ரம்மசாரியாக இருந்த காலத்தில் ஒரு ஏழை ப்ராம்மண ஸ்த்ரீக்கு இரங்கி லக்ஷ்மியிடம் ப்ரார்த்தித்துக் கொண்டு 'கனகதாரா ஸ்தவம்' பாடின கதை தெரிந்திருக்கலாம்.

அவர் ப்ரார்த்தித்துக் கொண்டவுடன் லக்ஷ்மி வந்து கனக வர்ஷமாகப் பொழிந்துவிட்டாள். அது ஏழை ப்ராம்மணக் குடும்பத்துக்காக. ஆசார்யாள் அதில் ஒரு குன்றிமணி கூட எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் லக்ஷ்மிக்கு த்ருப்தியாக இருக்குமா, அவர் கேட்டுக் கொண்டாரே என்று வேறே யாருக்கோ வாரி வழங்கி விட்டு, இத்தனை அழகான ஸ்துதி பண்ணின அவதாரக் குழந்தைக்கு எதுவும் கொடுக்காமல் போவதற்கு? ஆசார்யாளுக்கும், 'வேறே யாருக்கோதான் உன் அநுக்ரஹம் தேவைப்பட்டது; அதற்காக ப்ரார்த்தித்துக் கொண்டேன்; எனக்கு உன்னிடமிருந்து ஒன்றும் தேவையில்லை என்கிற மாதிரி இருந்து விட்டால் அது மரியாதைக் குறைச்சல். அதனாலே நாம் சின்னவன் மாதிரி இருந்து மஹாலக்ஷ்மியிடம் நமக்காகவும் ஏதாவது கேட்டுக் கொள்ள வேண்டும்' என்று தோன்றிற்று. ஆனால் அவருக்கு எந்த ஆசையும், எந்தத் தேவையும் வாஸ்தவத்தில் இல்லாததால் என்ன கேட்பது என்று தெரியவில்லை. அவளையே நமஸ்காரம் பண்ணி அதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று நினைத்து நமஸ்கரித்தார். உடனேயே, ''அவளிடம் வேறென்ன செல்வத்தைக் கேட்க வேண்டும்? இப்படி நாம் சின்னவராக நின்று கொண்டு ஒருத்தரிடம் ப்ரியத்தோடு, அடக்கத்தோடு, நன்றியோடு நமஸ்காரம் செய்யும் போது மனஸுக்கு எவ்வளவு நிறைவாக இருக்கிறது? அதனால் இந்த நமஸ்காரமேதான் பெரிய செல்வம். 'இந்த நமஸ்காரச் செல்வத்தை எனக்குக் கொடு' என்றே ப்ரார்த்தித்துக் கேட்டு வாங்கிக் கொள்வோம்'' என்று தோன்றிற்று. அதையே ச்லோகமாகப் பாடி விட்டார்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

மாறவர்மனுக்குச் சற்று நம்பிக்கை பிறந்தது. ''என்ன விஷயங்கள்?''

''ஜடாவர்ம பாண்டியரின் மகள் இருப்பதாக அறிந்து அவளை அப்புறப்படுத்த இங்கிருந்து மார்க்கியனை அனுப்பி வைத்தோம். ஆயினும் அவள் தப்பி விட்டதாக அறிந்தேன். அவளிருப்பது உமது அரியணைக்கு ஆபத்தல்லவா?''

''ஆம்.''

''மக்கள் இதை அறிந்தால் உம்மை ஏற்பார்களா?''

மாறவர்மன் வாழ்க்கையில் முதன் முறையாகச் சிந்தித்துப் பேசினான் :

''உண்மைதான். ஆனால் என்ன காரணத்தினாலோ சோழன் இன்னும் அந்த விவரங்களை மக்கள் அறிய வெளியிடவில்லை. இதை நமக்களிக்கப்பட்ட வாய்ப்பாகக் கருதி அவளைத் தீர்த்துக் கட்டி விடலாம்.''

''மன்னரின் எண்ணம் வேறுவிதமாக இருக்கிறது மாறவர்மரே. அரியணையில் நீங்கள் ஸ்திரமாக அமர்ந்தபின் நமது உறவைப் பலப்படுத்திக் கொள்ளலாம் என்று தீர்மானித்திருக்கிறார்'' என்றான் பராக்கிரமபாகு.

மாறவர்மனுக்கு இந்தப் பதில் பெருத்த ஏமாற்றமாக இருந்தது.

அவன் முகத்தை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்த பராக்கிரமபாகு, ''மாறவர்மரே! நம்பிக்கை இழக்க வேண்டாம். கவனமாகக் கேளுங்கள். ராஜராஜ சோழன் காலத்தில் இங்கு நேர்ந்த படையெடுப்பின் விளைவுகளை இப்போதுதான் ஒருவாறு சரிக்கட்டி வருகிறோம். அதற்கும் முன்பிருந்தே சோழர்கள் எங்களுக்குப் பலமான எதிரிகளாக இருந்திருக்கிறார்கள். ஆனால் பாண்டியருடன் எங்கள் தொடர்பு பல நூறாண்டுகளாகவே நெருக்கமாக இருந்து வந்திருக்கிறது. எனவே சோழருக்கு எதிராக உங்களுக்கு உதவுவதில் எவ்வித சந்தேகமுமில்லை. ஆனால்...''

''ஆனால் என்ன?''

''ஆனால் பாண்டியன் மகள் இருக்கும் வரை உங்களை மக்கள் ஏற்பது சிரமம். அவள் பட்டத்திற்கு வருவதால் எங்களுக்கு எவ்விதப் பயனும் இல்லை. எனவே அவளை ஒழிப்பதிலும் உமக்கு உதவுகிறோம். நீங்கள் போர் தொடங்கும் போது எமது வீரர்கள் உங்களுக்கு உதவ வருவார்கள். நான் அரசரிடம் கலந்து பேசி உங்களுக்குத் தெரிவிக்கிறேன். அதுவரை சற்றுப் பொறுமையுடன் இருங்கள்'' என்றான் பராக்கிரமபாகு.

''அப்படியானால் திருமணம்...?'' என்று இழுத்த மாறவர்மனின் பார்வை அப்படியே நிலைகுத்தி நின்றது. பிரமிப்பில் அவன் வாய் திறந்திருக்க, அடித்து வைத்த சிலையாக அப்படியே உறைந்து போய் அமர்ந்திருந்தான்.

அவன் பார்வை பதிந்த இடத்தில் சற்றே ஒய்யாரமாகச் சாய்ந்தபடி நின்றிருந்தாள் ஈழத்து இளவரசி அஞ்சனாதேவி.

(தொடரும்)



**ம**ராத்திப் பத்திரிகையோடு பொழுது விடிந்தது.

பேப்பர்வாலாவுக்கு மறந்து போகிறது. விஜயனுக்கு மட்டும் ஆங்கிலப் பத்திரிகை. இந்தச் சின்ன ஊரில் மற்ற இருநூற்றுச் சில்லறை வீட்டில் மராத்தியில்தான் மூச்சு விடுகிறார்கள்.

விஜயன் குனிந்து பத்திரிகையை எடுத்தான். வரிசையாகக் கோட்டில் தொங்கிக் கொண்டிருந்த எழுத்துக்களில், 'ரக்ஷா மந்த்ரி போல்தேஸ்...' என்று படிப்பதற்குள் முழுப் பத்திரிகையையும் வாசித்து முடித்த களைப்பு.

பாதுகாப்பு அமைச்சர் சொற்பொழிந்தது தவிர நேற்று உலகத்தில் எந்த விசேஷமும் நடந்திருக்காது...

பெரிய பெரிய குவளைகளோடு காந்தி குல்லாய் வைத்த பால்காரன் சைக்கிளில் வந்து இறங்கினான். இங்கே குற்றம் சொல்ல முடியாது விஷயம் பால்.

''திரும்பத் திரும்ப இங்கே நல்ல பால் கிடைக்கிறது என்று எழுதுகிறீர்களே... மற்றபடி உங்கள் சௌகரியம் குறித்து எழுதவும்...'' மைதிலி போன வாரம் எழுதியிருந்தாள்.

ஒரு சௌகரியமும் இல்லை... வீடு, மனைவி, குழந்தைகள், கொட்டு ரசம், பருப்புத் துவையல், ஆபீஸ்... எதுவும் இல்லை.

மற்ற கம்ப்யூட்டர் கம்பெனிகள் விஜயனைப் போன்ற சீனியர் சிஸ்டம் அனலிஸ்ட்டுக்களை சிங்கப்பூருக்கோ, பாப்புவாநியூகினிக்கோ அனுப்பிக் கொண்டிருக்க, இவன் கம்பெனி புனாவுக்குத் தென்கிழக்கே நூறு கிலோ மீட்டர் தள்ளி இங்கே போகச் சொன்னார்கள்.



''டெல்லியில் பெரிய தொழிற் குடும்பத்தைச் சேர்ந்த பிரம்மாண்டமான தொழிற்சாலை...''

அந்தக் குடும்பம் இரண்டுபட்டது மூன்று வருஷம் முன்னால். கப்பல் கம்பெனி உனக்கு. ஊறுகாய்க் கம்பெனி எனக்கு என்ற மாதிரி அண்ணன், தம்பி பாகப்பிரிவினை செய்து கொண்டு வரும் போது ஒரு ஸ்டீல் ரோலிங் கம்பெனி மிஞ்சியது. ''எனக்குத்தான்'' என்றார்கள் இரண்டு பேரும். பங்குகள் கன்னாபின்னா என்று கை மாற, 'கார்ப்பரேட் கூ' என்று எகனாமிக் டைம்ஸ் வர்ணித்த புரட்சியில், அண்ணன் வெற்றிக் கொடி நாட்ட, வெளியே வந்த தம்பி, உடனே எதிர்த் திசையில் நூறு ஏக்கரா வளைத்துப் போட்டு, புதிதாக ஸ்டீல்ரோலிங் பிளாண்ட் துவங்கி உற்பத்தி ஆரம்பிக்க மொத்தமே ஏழு மாதம் தான் பிடித்தது. புதுத் தொழிற்சாலையில் திரும்பிய திசை முழுக்க கம்ப்யூட்டர் டெர்மினல்கள்...

'ஆறு கம்ப்யூட்டர்களை நெட்ஒர்க்கில் இணைத்து இவ்விடத்து வேலை எல்லாம் கிரமமாகச் செய்து, டெல்லியில் இருக்கிற அலுவலகக் கம்ப்யூட்டருடனும் மோடம் மூலம் குசலம் விசாரித்து சமாசாரம் சொல்ல வேண்டியது... வேலை சுத்தமா இருக்கணும் ஆமா.. என்ன கேக்கறீங்க?'

கடுமையான போட்டியில் விஜயனின் கம்ப்யூட்டர் கம்பெனி வென்று.....

'யாரங்கே?' என்றால், 'ஜயா!' என்று வர உங்க ஆள் யாராவது ஒரு ஆறு மாசம் வேணும்... விஷயம் தெரிஞ்ச ஆசாமி...'

''விஜயன்... நீ கல்யாண் போய் பஸ் புடிச்சு... கூப்பிடு தூரம்தான்... சீக்கிரமே திரும்பக் கூப்பிடறோம்... புரமோஷனோட....''

''**சீ**யா பாய்சாப்... என்ன பலமான யோசனை...''

இரா. முருகன்

வீட்டுச் சொந்தக்காரர் தேஷ்பாண்டே மாடிப் படியேறி வந்து கொண்டிருந்தார். காலைச் சாப்பாடு நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

தேஷ்பாண்டே ரயில்வே சர்வீஸில் இருந்து ரிடையர் ஆனவர். பென்ஷனும், டயாபடீஸுமாகச் சொந்த ஊர் வந்தவர். மனைவிக்குக் கோதுமை ஒத்துக் கொள்வதில்லை. அரிசி பிடிக்காது.

விஜயன் உடை மாற்றிக் கொண்டு கிளம்பினான். நாலு படி இறங்கியதும் அடையாள அட்டை நினைவுக்கு வந்தது. அது இல்லை என்றால் கம்பெனியில் முக்கியமான பகுதிகளில் உள்ளே விட முரண்டு பிடிக்கிறார்கள். 'நீ இங்கே இருக்கும் வரை நீயும் நம்ம ஆளுதான்... பிடி...' என்று போன வாரம்தான் கொடுத்து மாட்டிக் கொள்ளச் சொன்னார்கள்.

கீழே போன போது தேஷ்பாண்டேயும், வீட்டம்மாளும் சாப்பிடாமல் காத்துக் கொண்டிருந்தார்கள். இத்தனை சுத்தமான வீட்டுக்குள் கால் வைக்கவே விஜயனுக்குத் தயக்கமாக இருந்தது. சந்ததி இல்லாத குடும்பம்... கேப்பை ரொட்டி சாப்பிட்டு, மீந்த பணத்தை வட்டிக்கு விட்டு இன்னும் கேப்பை வாங்குகிறார்கள்...

சே...! என்ன வாழ்க்கை இது... விடிந்ததும் கேப்பை ரொட்டி தின்று கொண்டு.. நாக்கு செத்துப் போய் நாலு மாசமாகிறது...!

விஜயா... நன்றி மறக்காதே... நல்ல ஓட்டல் சுற்றுவட்டாரத்தில் பத்து மைலுக்குக் கிடையாது; பாக்டரியிலும் டீ தவிர வேறு ஏதும் கிட்ட வழி இல்லை... இரண்டு வேளை சாப்பாடு, மதியம் கையில் வேறே எடுத்துப் போய்... தேஷ்பாண்டேக்கள் இல்லாவிட்டால் இந்தக் கேப்பை ரொட்டியும் கிடைக்காது...

''வேண்டாம் மாஜீ... உங்கள் உபசரிப்பிலேயே பாதி வயிறு நிறைந்து விட்டது...''

விஜயன் எழுந்தான்.

''உன் லஞ்ச் பாக்கெட் ரெடி...''

நேர்த்தியாகக் கட்டி பிளாஸ்டிக் பையில் வைத்த சப்பாத்திகள்...

ஒரு பெரிய கூட்டமே பஸ்ஸுக்காகக் காத்திருந்தது. அனேகமாக எல்லோர் கையி



ஓம் சிறிய கழி. முனையில் மணி கட்டியது. எங்கேயோ திருவிழா போலிருக்கிறது. பஸ் எப்போது வரும்... இவர்கள் ஏறியது போக இடம் பாக்கி இருக்குமா... அது ஏன் இந்தப் பக்கத்தில் நாற்பது வயதுக்கு மேற்பட்ட ஆண்கள் எல்லாம் காந்தி குல்லாய் வைத் திருக்கிறார்கள்...?

சிரத்தையாகக் குல்லாய்களை எண்ணிக் கொண்டிருக்க, கணகணவென்று மணிகள் முழங்க பஸ் வந்தது. உள்ளேயும் நிறைய குல்லாய்கள்... கழிகள்... மணிகள்...

பின்னால் இருந்து தள்ளினார்கள். விலாவில் கழிகள் வருடின. யார் குல்லா யையோ தட்டி, யார் மடியிலோ விழுந்து எழுந்து, யார் காலையோ மிதித்து, சமா ளித்து நிற்பதற்குள் பஸ் ஊர்ந்து கொண் டிருந்தது... கையில் ஏதோ குறைகிற மாதிரி.. சாப்பாட்டுப் பொட்டலம் எங்கே... யாரைக் கேட்க... பஸ் முழுக்க 'விட்டல... விட்டல' என்று விடாமல் ஜபிக் கிற குரல்கள்.... இறங்கவாவது வழி விடு வீங்களா... பேசாம திருவிழாவுக்குப் போனா என்ன... பலாக்களை வாசனையும், ஊதல் சத்தமும், ரங்கராட்டினமும், பீம புஷ்டி அல்வா விற்கிறவனின் மெக போன் சத்தமுமாக விஜயன் மனதில் ஒரு திரு விழா பிரம்மாண்டமாகக் கவிய, 'டெர் மினல் எமுலேஷனில் ஏதோ குழப்பம்... வந்து சரி பண்ணு' என்று யாரோ கேட்கிற தாகப் பிரமை...

கனவில் கூட கம்ப்யூட்டரும், தயிர் சாத மும்தான் வருகின்றன.

பாக்டரி வாசலில் பஸ் நின்றது. இன் னும் ஏழெட்டுப் பேர் இறங்கினார்கள். இவ னைத் தவிர மற்றவர்கள் எதிர்ப்பக்கம் நடந் தார்கள். பழைய தொழிற்சாலையில் வேலை செய்கிறவர்கள்... எல்லா சௌகரி யமும் கிடைக்கப் பெற்றவர்கள்...

''அங்கே பிரமாதமா ஒரு காண்டீன் இருக்கு... உங்க பக்கத்து ஆள்தான் நடத்த றார். மசால் தோசை, இட்லி, வடா, பொடேட்டோ வடா எல்லாம் உண்டு... பதினைந்து பைசா இட்லி... சாய் பத்து பைசா... மீதியை கம்பெனி தருகிறது... இங்கே அதிகம் ஒரு கப் சாயா கூட தர முடிய வில்லை...''

- ராஜு நாயக் சொன்னது நினைவு வந் தது. அவன் அங்கே இருந்து கட்சி மாறி வந் தவன்...

கொஞ்சம் தொலைவில் தெரிந்த அந்தக் கட்டடங்களை ஏக்கத்துடன் பார்த்தான் விஜயன். அங்கே யாரெல்லாமோ இப் போது கடக்கட இட்லி தின்று கொண்டிருப் பார்கள்...

வயிற்றில் லேசாகப் பசி எட்டிப் பார்க் கிறது. ஒரு தட்டு உப்புமா கிடைத்தாலும் போதும்... சே... எப்பப் பார்த்தாலும் பசி... சாப்பாடு... டிடிஷ் டிரக்டரியில் துருவி னால் டெர்மினல் எமுலேஷன் பற்றி துப்பு கிடைக்குமா? கிடைக்கும்... ஒரு ப்ளேட் பஜ்ஜி கிடைக்குமா?

**வெ**ய்யில் ஏறிக் கொண்டிருந்தது. ''லேவாய்லா சலா'' வேலை பார்க்கிற வர்கள் சாப்பிடப் போனார்கள்.

விஜயன் ஒரு தீர்மானத்துக்கு வந்தான். எதிரிக் கோட்டையில்தான் இன்றைக்குச் சாப்பாடு.

நடக்க ஆரம்பித்தான்.

இங்கே இருந்து பார்க்கும் போது பக் கத்தில் இருப்பதாகத் தெரிந்தது. நடக்க நடக்க விலகிப் போகிறதாகத் தோன்றியது. சமவெளியில் தூரம் மயங்கித் தெரிகிறது. பசி வேறு.

ஒரு கெடுபிடியும் இல்லாத வாசல். கூர்க்கா சிநேகமாகச் சிரித்து விக்கெட் கேட் டைத் திறந்தான். யாரோ சலாம் வைத்தார் கள். ''நாயர் சாப்... கைஸே ஹை ஆப்...'' என்று யாரோ போகிற போக்கில் தோளில் தட்டிக் குசலம் விசா ரித்து விட்டுப் போனார்கள். யார் நாயர் சாப்? நம் மைப் போல சாய லில் வேறு யாரும் இங்கே இருக்கிறார் களா? காண்டீன் எந்தப் பக்கம்?

இந்தப் பக்கம் என்று அறிவிப்புப் பலகையில் ஒற்றை விரல் கட்டிக்காட்டிய திசையிலிருந்து மனத் துக்கு இதமாக வெங்காயம் வதங்குகிற வாடை.

**சே.... எப்பப் பார்த்தாலும் பசி..... சாப்பாடு..., கனவில் கூட கம்ப்யூட்டரும் தயிர் சாதமும்தான் வருகின்றன....**

சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள். படுக்கை வசமாக இல்லாமல் நேராக நிமிர்த்தி விரித்த இலைகளில் சப்பாத்தியும், சாதமும், காயும் கறியுமாக... கம்பி வலை மூடிய பெரிய பாத்திரத்தில் ஆவி பறக்க இட்லியைக் கொண்டு வந்து கொட்டிக் கொண்டிருக்கிறார்கள். ''ஃபக்த் தஹி கேஹுங்கே...'' யாரோ சாப்பாட்டுப் பாத் திரத்தைத் திறந்து வைத்து விட்டு தயிர் மட்டும் வாங்க வருகிறார்கள்...

'அன்னியர்கள் கண்டிப்பாக அனுமதிக் கப்பட மாட்டார்கள்' என்று மூன்று மொழி களில் மிரட்டுகிற அறிவிப்பு கவுண்டரில், நெற்றியில் சந்தனக் கீற்றோடு ஒருவர். காஷ்ரிஜிஸ்டர் மெஷினில் பொத்தான் பொத்தானாக அமுக்கி, சீட்டுக் கொடுத்து.

நூட்டை எண்ணி வாங்கிக் கொண்டிருக் கிறார்... ''எஸ் பிளீஸ்...'' வரிசை நகர் கிறது.

எட்டு இட்லி... வேண்டாம்... நாலு இட்லி, ரெண்டு தோசை... பெருந்தீனிக் காரன் என்று நினைத்து விட்டால்... நாலு மாதம் கேப்பை ரொட்டி தின்றால் அவர் களுக்கும் நாக்கு ஊறும்...

யாரோ பெரிய புஸ்தி மீசையோடு ஆறரை அடியில் ஆஜானுபாகுவாக நடந்து வந்தார். மிலிட்டரி யூனிபார்ம். பார்க்கிற வர்கள் பல பேரும் மரியாதையாகப் புன் சிரிக்கவோ வணக்கம் சொல்லவோ தவற வில்லை. விஜயன் வயிற்றில் சங்கடமாக உணர்ந்தான். திரும்பி விடலாமா?

''நாயர்... யு ஆர் பேக்...'' திடீரென்று பிடரியில் பெரிய சத்தம் அறைகிறது. திரும் பினால் முரட்டு மீசையும், சிவந்த கண் களும் முறைக்கின்றன.

'''ஐ யாம் சாரி... நாயர் என்று நினைத்து...''

அவர் பேச்சு பாதியில் நின்றது. பார்வை விஜயனின் சட்டைப் பையில் நிலைக்கிறது.

''நீங்கள் இங்கே பணிபுரிகிறவரா?''

''வந்து...''

விஜயன் குனிந்து பார்க்க, சட்டைப் பைக்கு வெளியே அடையாள அட்டை மேல் அவன் முகமும் கம்பெனி சின்னமும் விதியும் சிரித்தன.

''இங்கே யாரைப் பார்க்க வந்தீர்கள்?'' பார்வை மெல்லக் கடுமையாக, மீசையை நீவி, புன்னகையைத் துடைத்தார்.

''இல்லை... இங்கே ஒரு வேலை யாக...'''

இடது கோடியில் சாப்பிட உட்கார்ந்த சோகைச் சிவப்புப் பெண்கள் சிரித்த மாதிரித் தெரிந்தது. சாப்பாட்டை மென்று கொண்டு யார் யாரோ பார்த்துக் கொண் டிருப்பது முதுகில் உறைத்தது.

ஒரு நண்பனை அழைத்துப் போகிறது போல, வரிசையிலிருந்து விஜயனை லாகவ மாக நீக்கிக் கையைப் பிடித்தபடி நடந்தார். மணிக்கட்டில் படிந்த விரல்கள் சமீப காலம் வரை துப்பாக்கி பிடித்தவை என்று தகவல் சொல்லின.

ஒரு வினாடியில் நிகழ்காலமும் எதிர் காலமும் பற்றிய கவலைகள் மனதில் பூதா காரமாக எழ, பசி போய், உடம்பு தொப்ப லாக வியர்வையில் நனைந்தது. இட்லி சாப் பிட வந்தேன் என்றால் யாரும் நம்பப் போவதில்லை.

விஜயனின் கம்பெனிக்குத் தகவல் போகும். போலீஸுக்குப் போகும். மராத் திப் பத்திரிகையில் ஏழாம் பக்கத்தில் ஈசான மூலையில் 'வெடிகுண்டோடு கம்ப்யூட்டர் தமிழன் கைது' என்று வரும். தேஷ் பாண்டே பெட்டியைத் தூக்கி வெளியே எறிவார். காந்தி குல்லாய்காரர்கள் கரும்பு விலையோடு இவனைப் பற்றியும் சாயந் திரம் லாவணி பார்க்கப் போகிற போது அலசுவார்கள்... வேலை போகுமா...

''நீ தயிர் வாங்கி வராததால் நான் காண்டீன் போக வேண்டியிருந்தது. எங்கே தொலைந்தாய்...'' எதிர்ப்பட்ட யாரையோ புஸ்தி மீசை பஞ்சாபியில் எரிந்து விழ, காக்கிச் சட்டைப் போட்ட அந்த சர்தார்ஜி தலைப்பாகையைச் சொறிந்து, நாலு சலாம் வைத்து மன்னிக்கச் சொல்லிக் குழைந்தான்.

ஆறடி சர்தாரையே நாலடியாராகக் குனியவைக்கிற இந்த முரடருக்கு, சோனித் தமிழன் எந்த மூலை... விஜயன் எல்லா தெய்வத்தையும் துணைக்கு அழைத்தான். இவர் நம்ப வேண்டும். பூர்வோத்திரம், இந்த நிமிடம் வரை விஜயன் என்ற அப்பா வியின் வாழ்க்கை வரலாறு சொல்ல வேண் டும்.... உடனே...

அவன் பேசப் பேச அவர் தரையை முறைத்துக் கொண்டே வர, அவர் அலு வலகம் வந்த போது, தேஷ்பாண்டே வீட்டுக் கேப்பை ரொட்டிகள் பஸ்ஸில் தொலைந்து போன தகவல் பாதியில் நின்றது. நம்புங்கள்... அது இருந்தால் வந்தே இருக்க மாட்டேன்...

துடைத்து வைத்தாற்போல பெரிய மேஜை. பிரம்மாண்டமான குஷன் சேர்... நான்கைந்து டெலிபோன்கள்... எல்லாவற் றிலும் செய்தி பறக்கப் போகிறது.. தொழிற் சாலையிலிருந்து முதன்மை பாதுகாப்பு நிர்வாகி பேசுகிறேன்... இங்கே ஒரு பையன்...

நாற்காலியில் உட்காரவில்லை. பின் னால் கதவு தெரிந்தது. திறந்தார். விஜய னைக் கையைக் காட்டி அழைத்தார். 'விசா ரிக்க'ப் போகிறார்.

மெல்ல பலியாடு போல அங்கே போனான். முப்பது வயதிலும் கண்ணில் நீர் நிறைந்தது. மாலதிக்காக, குழந்தைக்காக, அவமானப்பட்டதற்காக...

''வயிறு நிறையச் சாப்பிடுங்க தம்பி...'' சப்தமாகத் தமிழில் சொல்லியபடி உள்ளே விரல் காட்டிய இடத்தில் - சாப்பாட்டு மேஜையில் நீர் தெளித்து விரித்த வாழை இலை. சோறு.

● கர்நாடகாவின் சோமேஸ்வரர் என்னும் ஊரின் ஸ்பெஷாலிட்டி மோர் சோடா!

● கர்நாடகாவின் 'லிங்காயத்' வகுப்பைச் சார்ந்த பெண்கள் பூணூல் அணிகின்றனர்.

- மஞ்சுதேவன்.

* ரங்கராட்டினம்



# சௌகார் ஜானகி

# எம்.ஜி.ஆர். காட்டிய அக்கறை!

'மாடப் புறா' படத்தின் கதையைச் சொல்லி, அதில் கதாநாயகியாக நடிக்க நான் பொருத்தமாக இருப்பேன் என்றுதான் என்னை அப் படத்துக்கு ஒப்பந்தம் செய்தார்கள்.

ஆனால் ஒரு நாள் படப்பிடிப்பு முடிந்த பிறகு அப் படத்திலிருந்து நான் நீக்கப்பட்டேன். அதற்கான காரணம் என்ன என்று விசாரித்தபோது மேலும் அதிர்ச்சி...! முதல் நாள் படப்பிடிப்பின் போது நான் கால்மேல் கால் போட்டு உட்கார்ந்திருந்தவிதம் எம்.ஜி.ஆருக்குப் பிடிக்கவில்லையாம்; அதனால்தான் அவர் என்னைப் படத்திலிருந்து நீக்கும்படி சொன்னார் என்று தெரிய வந்தது. நான் எப்போதும் மற்றவர்களுக்கு உரிய மரியாதையைத் தருவதில் மிகவும் கவனமாகவே இருப்பேன். குறிப்பிட்ட அந்தத் தினத்திலும் எம். ஜி. ஆர். செட்டுக்கு வந்தபோது, மற்றவர்களைப் போலவே நானும் எழுந்து மரியாதை செலுத்தினேன். அதன்பின், என் வழக்கப்படி, உட்கார்ந்தவுடன் கால்மேல் கால் போட்டுக் கொண்டேன்.

''ஜானகி கர்வம் பிடிச்ச டைப் இல்லை... எப்பவுமே அது அப்படித்தான் உட்காரும். சட்டைக்காரி மாதிரி காச் மூச் கன்னு இங்கிலீஷ் பேசும், கொஞ்சம் கண்டிப்பா நடந்துக்கும். ஆனால் பழகினா அது குழந்தை மாதிரி'' இப்படியெல்லாம், எம்.ஆர்.ராதா, எம்.ஜி.ஆரிடம் கூறி, சமாதானம் செய்ய முயன்றதாகவும் கேள்விப்பட்டேன். எம். ஜி. ஆர். அதைக் கேட்டுச் சமாதானமடைந்தாலும் கூட, அதற்கு முன்னதாகவே, என்னை நீக்கி விட்டு, வசந்தி பி.ஏ. என்ற தெலுங்கு நடிகையை அந்தப் பாத்திரத்தில் நடிக்கப் பேசி முடித்து விட்டதால், எனக்கு மாடப் புறாவில் நடிக்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை.

அதன்பின், பல்வேறு விழாக்களின் போதும், எம். ஜி. ஆரும் நானும் சந்தித்துக் கொண்டாலும், இந்தச் சம்பவத்தைப் பற்றிப் பேசியதில்லை.

பணம் படைத்தவன் படத்தின் ஷூட்டிங்கின் போது, தமது செயலால் என் நெஞ்சை நெகிழ வைத்தார் எம்.ஜி.ஆர். 'கண் போன போக்கிலே கால் போகலாமா' என்ற பாடல் காட்சி எடுக்கப்படவிருந்த தினம். மேக் அப் போட்டுக் கொண்டு செட்டுக்கு வந்த என்னையே சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த எம்.ஜி.ஆர்., டைரக்டர் ராமண்ணாவைக் கூப்பிட்டு, ''இந்தப் பாடல் காட்சியை இப்போது எடுக்க வேண்டாம்'' என்று கூறினார்.

இப்படி அவர் சொன்னதற்கான காரணம்...? டைரக்டருக்கும் புரியவில்லை; எனக்கும் விளங்கவில்லை.

பின்னர் எம்.ஜி. ஆரே அதை விளக்கினார் :

''ஜானகி குடும்பப்பாங்கான வேடங்

களில் அதிக மாக நடித்திருக்கிறார். அத னால் ரசிகர்கள் மனத்தில் அவருக்கு மரியா தைக்குரிய இமேஜ் இருக்கிறது. இந்த உடை மிகவும் 'டிரான்ஸ்பரன்ட்' ஆக உள்ளது. அதை ரசிகர்கள் விரும்ப மாட்டார்கள் என்ப தோடு ஜானகியின் இமேஜையும் அது பாதிக் கும்...'' என்றார் எம்.ஜி.ஆர்.

சக கலைஞரின் இமேஜ் பற்றி எம். ஜி.ஆர். இவ்வளவு தூரம் அக்கறையெடுத் துக் கொண்டது என் மனத்தைத் தொட்டது.

தமிழிலும், தெலுங்கிலும் பாமா விஜயத்தில் நடித்த எனக்கு, இந்தியில் அந்தக் கேரக்டரில் நடிக்க வாய்ப்பு வந்த போது ஏற்றுக் கொள்ள மிகவும் தயக்கமாக இருந்தது. இத்தனைக்கும் அதுவே எனக்கு முதல் இந்திப் படம். இந்திப் படங்கள் தமிழில், தெலுங்கில் எடுக்கப்பட்ட போது அங்கே மீனா குமாரி நிருபாராய் ஆகியோர் நடித்த கேரக்டர்கள் எனக்குக் கிடைத்தன.

* பணம் படைத்தவன்



முதன் முதலில் இந்தியில் அறிமுகம் ஆகும் போது ஒரு நகைச்சுவை நடிகையாக இல்லாமல் ஒரு சீரியஸ் கதாபாத்திரத்தின் மூலம் அறிமுகம் ஆக விரும்பினேன். இதை, படத்தின் தயாரிப்பாளர், எஸ்.எஸ். வாசனிடமும் வெளிப்படையாகவே தெரி வித்தேன். அவரோ, உங்களுக்கு இணை யாய் அந்த கேரக்டரைச் செய்ய இந்தி யில் யாரையும் என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. அதனால் நீங்கள் தான் நடிக்க வேண்டும் என்று வற்புறுத் தினார். நானும் அதைத் தட்ட முடியாமல் ஏற்றுக் கொண்டேன்.

நான் எதிர்பார்த்தது போலவே நடந் தது! நான் காமெடி வேடங்களுக்குத்தான் லாயக்கு என்று இந்தியில் நினைத்துக் கொண்டு விட்டார்கள். இந்தியில் நடிக்க வேண்டும் என்று எனக்கும் ஆர்வம் இருந்தது. எனக்கு இந்தி மிக நன்றாய்த் தெரியும். என்னால், சொந்தக் குரலில் வசனம் பேச முடியும் என்றாலும் கூட எனக்கு இந்திப்பட வாய்ப்புகள் ஏதும் வரவில்லை.

ரொம்ப நாட்களுக்குப் பின், பிரேம் சீத், 'தோஸ்த்தி துஷ்மனி' ஆகிய படங் களில் மட்டும் குணச்சித்திர வேடங்களில் நடிக்க வாய்ப்பு வந்தது. இரண்டும் நன்றாக ஓடின.

'காவியத் தலைவி' படத்துக்குப் பின் சொந்தமாக இன்னொரு படம் தயாரிக்க முடிவு செய்தேன்... இல்லை; அந்தகைய முடிவுக்குச் சிலர் என்னைத் தூண்டினார் கள். அந்தப் படம்தான் 'ரங்க ராட்டினம்'. மனநிலை பாதிக்கப் பட்ட ஒரு பெண்ணைப் பற்றிய கதை. படம் நன்றாகவே அமைந் தது. ஆனால் அது ரிலீஸ் ஆன சமயம், ஏறத்தாழ அதே கதை யமைப்பு உடைய 'வெகுளிப் பெண்' படமும் வெளியாயிற்று. அதனால் 'ரங்கராட்டினம்' வெற்றி பெறவில்லை.

இந்தக் கட்டத்தில் என் திரை யுலக வாழ்க்கை முடிவுற ஆரம் பித்தது. நடிப்பின் மூலம் சம்பா தித்ததை வைத்து, என் மூன்று குழந் தைகளுக்கும் சீரான வாழ்க்கை அமைத்துக் கொடுத்து விட்டபின், எனக்கென்று வருமானம்...? நிலை யான வருமானத்துக்கு உடனடி யாக ஏதாவது செய்தாக வேண்டும் என்ற நிலை உருவாயிற்று... என்ன செய்வது என்பதுதான் கேள்விக் குறியாக இருந்தது!

எனக்குத் தெரிந்ததோ நடிப்பு மட்டுமே... ஆனால், முக்கிய பாத் திரங்களில் நடிக்க எனக்கு வாய்ப்புத் தரப் படவில்லை....

என்ன செய்வது...?

கடந்த காலத்தை அசைபோட்டேன்!

நிகழ்காலத்தை அலசினேன்.

எதிர்காலம் பற்றிச் சிந்தித்தேன்...

அதன் விளைவாக ஒரு முடிவுக்கு வந்தேன்...

(தொடரும்)

படங்கள் உதவி :

ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

# பெண்

உதா தீபன்

**ஸ்**வர்ணா!

தாழம்பூ நிறத்தில், கோவில் சிற்பம் போன்ற உடல்வாகு. நெற்றியில் புரளும் முடிக்கற்றை. பேசும் கண்கள். குழி விழும் கன்னம், ஈர்க்கும் உதடுகள்... கொள்ளை கொள்ளும் அழகு... அவளின் அழகுதானே என்னை இத்தனை தூரம் வீழ்த்தியிருக்கிறது... அதனால்தானே அமைதியான நீரோடையில் இருந்த எனது உள்ளம் ஆர்ப்பரிக்கும் கடலாகி விட்டது... இதுதான் விதியா?

சென்ற வருடம் யூனிவர்ஸிடியில் முதலாவதாகத் தேறியதற்குக் கிடைத்த கோல்டு மெடல் எதிரேயிருந்த சுவரில் ஊஞ்சலாடி மின்னியது. அதைக் கழுத்தில் அணிவித்து பிரின்ஸ்பால் பாராட்டிய வார்த்தைகள் இப்பொழுதும் காதில் ஒலித்தன.

'ஐ ஆம் வெரி ப்ரௌட் ஆப் யூ சந்துரு...'

அன்று பெருமைப்பட்ட அதே பிரின்ஸ்பால் சில தினங்களுக்கு முன் அழைத்து, 'என்னாயிற்று சந்துரு? சமீபத்திய உனது போக்கு திருப்திகரமாய் இல்லை...' என்றார் கனிவும், கண்டிப்புமாய்.

அவருக்கு மட்டுமல்ல, எனக்கே என் மேல் திருப்தியில்லை.

என்ன செய்ய? சிந்தித்தேன்.

ஸ்வர்ணாவை மறக்க வேண்டும்... அதுதான் உசிதம். அவளை மறந்து படிக்க வேண்டும். படித்து முன்னேறி...

'ஸாரி மிஸ்டர் சந்துரு. நான் உங்களைக் காதலிக்கலை!'

சற்று முன் எனக்குள்ளே தோன்றின விவேகம், உறுதியெல்லாம் நீர்க்குமிழியாய் உடைய திரும்பவும் அவளின் நினைவில் அமிழ்ந்தேன். நெஞ்சு கனத்தது. நான் இனி ஆக்கபூர்வமான மனிதனாக உருப்பெற்று வாழ வேண்டுமானால் ஸ்வர்ணா தேவை... அவளின் நேசம் தேவை என்பது நிதர்சனமாய்ப் புரிந்தது.

மீண்டுமொருமுறை அவளிடம் சென்று என் தவிப்பைச் சொல்லப் போகிறேன். வேறு வழி தோன்றவில்லை.

**ஏ**தேதோ சிந்தனையிலேயே மாலையானது. எழுந்து குளித்து, அழகாக உடுத்திக் கொண்டு புறப்பட்டேன்.

கல்லூரி முடிந்து என் இனிய தேவதை தனது தோழிகளுடன் வந்து கொண்டிருந்தாள். சமீபமாய் வர, இதயம் படபடக்க, ''ஸ்வர்ணா!'' என்றேன்.

அவள் திரும்பினாள். ''ஒரு நிமிஷம்!''

எனது அழைப்பை சற்று நேரத் தயக்கத்துக்குப் பின் ஏற்று, பிரிந்து வந்தாள்.

''உங்களோட தனியா பேசணும்'' என்றேன்.



வேப்பமரத்தின் நிழலை அடைந்தோம். நான் சொல்லப் போவதை அவள் கணித்திருப்பாள்.

''நீங்க அன்னைக்கு மறுத்துட்டதில இருந்து என் நிம்மதியே பறிபோயிடுச்சு. ஒழுங்கா சாப்பிட முடியலை. படிக்க முடியலை...''

''அதுக்கு நானென்ன பண்றது? அப்ப சொன்ன பதில்தான் இப்பவும். நான் உங்களைக் காதலிக்கலே... தர்மசங்கடமான நிலையை உருவாக்காதீங்க மிஸ்டர் சந்துரு. வற்புறுத்திக் காதலை உருவாக்க முடியாது. புரிஞ்சிக்குங்க ப்ளீஸ்... இனி இந்த மாதிரி பேச்சை எடுக்காதீங்க... நான் வர்றேன்!''

அவள் அகன்றாள்.

நடைபிணமாய் ஹாஸ்டலை நோக்கித் திரும்பினேன். 'காதல் தோல்வியின் ரணத்தில் வெந்து துடிப்பதை விட தூக்க மாத்திரையோ, ரயில் தண்டவாளமோ மேல் அல்லவா?'

இந்த எண்ணம் உறுதிப்படுவதற்குள் சிரமப்பட்டுக் கலைத்தேன்.

'படிப்பை நிறுத்தி விட்டுக் கல்லூரியிலிருந்து போய் விடலாமா? எதிர்காலம்...? அதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இங்கிருந்தாலும் என்னால் இனி கவனம் சிதறாமல் படித்துப் பட்டம் பெற முடியாது. ஸ்வர்ணாவின் நினைவு வதைத்துக் கொண்டேயிருக்கும். விலகினாலாவது அவளைக் கொஞ்சம் கொஞ்சமாக மறக்கலாம்.'

எனது அறையை வந்தடைந்ததும் காகிதம் எடுத்து எழுதினேன். 'மதிப்பிற்குரிய முதல்வர் அவர்களுக்கு...

என்னால் படிப்பைத் தொடர முடியாத காரணத்தினால் இத்துடன்...'

அதற்குள் கல்லூரியிலிருந்து ரூம் மேட் மனோகர் வந்தான்.

''என்னடா எழுதறே?''

சொன்னேன். உடனே அவன் ஆத்திரமானான். காகிதத்தைப் பிடுங்கி கிழித்தெறிந்து விட்டுப் போய் விட்டான்...

''வாட் நான்சென்ஸ்! 'டிஸ்கன்டினியூ' பண்ணிட்டுப் போற அளவுக்கு என்னாயிடுச்சி உங்களுக்கு?''

ஸ்வர்ணா... பாஸ்கட் பால் கோர்ட்டுக் கருகே வேப்பமர நிழலுக்கு வரச் சொன்னது இப்படி அதட்டத்தானா...? மனோ வந்து சொன்ன போது நான் என்னவெல்லாமோ நினைத்துக் கொண்டு கிளம்பி வந்திருந்தேன்...

''அனுபவிக்கிறவனுக்குத்தான் காதல் தோல்வியோட நரக வேதனை தெரியும் ஸ்வர்ணா...''

''பைத்தியக்காரத்தனமா பேசாதீங்க சந்துரு. இந்த ஸ்வர்ணா இல்லாட்டி வேற புவனா இல்ல கருணா... அப்படியிருக்கறப்ப இவ்வளவு பெரிய சோகம், விரக்தி எதுக்கு? இதனால நான் காதலைக் கொச்சைப்படுத்தறேன்னு அர்த்தமில்லை. வாழ்க்கையையே பாதிக்கிற நிலை வந்ததுக்கப்புறம் அதை விட்டொழிக்கிறதுதான் புத்திசாலித்தனம்னு சொல்ல வர்றேன். தன்மானத்தைச் சாகடிச்சிட்டு இப்படி ஒரு முடிவுக்கு வரலாமா...?''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்றேன் லேசான அவமான உணர்வோடு.

''மனோதான் வந்து சொன்னார். படிப்பை நிறுத்திட்டுப் போறேன்னு சொல்லீங்களே! உங்களையே நம்பியிருக்கிற குடும்பத்தோட நிலைமை என்னாகும்? உங்க பலவீனத்தால உங்க குடும்பமும் கண்ணீர் சிந்தணுமா? தற்காலிகக் கவலைகளை விட எதிர்காலத்தைப் பத்தின சிந்தனை முக்கியம். அதனால சஞ்சலங்களைத் தூக்கிப் போட்டுட்டு புக்ஸை கையில எடுங்க சந்துரு... இந்த வருஷமும் நீங்க தங்கப் பதக்கம் வாங்கணும்...''

- ஸ்வர்ணா பேசி முடித்து விட்டுப் போய் விட்டாள். அவள் வார்த்தைகள் மட்டும் அங்கேயே சுற்றி வந்தன.

கண்மூடி வலி தாங்கினேன். சஞ்சலங்கள் மறைய மனம் ஒருமுகமானது.

---

தமிழகத்தின் முதல்வராக கலைஞர் இருந்த சமயத்தில் சென்னையில் நடந்த மாநில கலாட்சி மாநாட்டில் பாண்டிச்சேரியிலிருந்து வந்த "ஜோதி" கலைஞரிடம் கொடுக்கப்பட்டது. தீபத்தின் எண்ணெய் கலைஞரின் கைகளிலேயே வழிந்து ஒட்டிக் கொண்டது.

உடனே மாவட்டச் செயலாளர் நீல. நாராயணன் தம்முடைய தோள் துண்டை எடுத்துக் கலைஞரிடம் நீட்டினார்.

நன்றியுடன் புன்னகை புரிந்தவாறே கலைஞர், "உங்கள் தொண்டைப் போலவே, உங்கள் துண்டும் இப்போது நல்ல சமயத்தில் கை கொடுக்கிறது" என்றார்!

- காரை உமாபதி



**சோ**மாலியா என்றாலே எலும்புக் கூடாய் நீக்ரோ குழந்தைகள், பட்டினிச் சாவு; நோய், ஓயாத சண்டை - இப்படி மேலெழுந்தவாரியாகத் தெரிந்து வைத்திருக்கிறோம்.

இந்த ஆப்பிரிக்க நாட்டில் உண்மையில் நிலவும் பிரச்னை என்ன? சுருக்கமாகச் சொல்கிறார் சூர்யா கங்காதரன். இவர் 'வோர்ல்ட் திஸ் வீக்' டீ.வி. நிகழ்ச்சி ரிப்போர்ட்டர்...



# சோமாலியா சோகம்!

"**ஆ**ப்ரிக்க நாடுகளில் பொதுவாகப் பல வேறு இன ஆதிவாசிகள் இருப்பார்கள். இவ்வாறு இல்லாத ஒரே நாடு சோமாலியா. ஆனாலும் இங்கே ஒரே இனத்தைச் சேர்ந்த பல குழுவினருக்கிடையே அடிதடி!

"பெயரளவுக்கு அரசாங்கம் இருக்கிறது - அதிபர் சையத் பாரி. இவருக்கு அமெரிக்கா ஆதரவு தருகிறது. அலி மஹாதி மொகம்மது என்பவர் சோமாலியாவின் பிரதம மந்திரி. ஜெனரல் ஐதீத் என்பவர் நாட்டின் தலைமைப் பதவிக்குக் குறிவைத்திருக்கிறார். இவரைப் போல் தங்களுக்குத் தாங்களே பட்டம் கொடுத்துக் கொண்டு பதவிக்கு அலையும் வேறு ஜெனரல்களும் இருக்கிறார்கள். ஆனால் ஐதீத் சற்று முக்கியப் புள்ளி! இவர் முன்னொரு காலத்தில் சோமாலிய தூதுவராக இந்தியாவில் கூட வேலை பார்த்திருக்கிறார்....!

"சோமாலியாவில் ஏதோ கொஞ்சம் சோளமும் அரிசியும் விளைவதோடு சரி... இது யானைப் பசிக்குச் சோளப் பொரி போல்தான்! மக்கள் பட்டினியில் சாகாமல் இருக்க வேண்டுமானால் நாடு முன்னேற வேண்டும். ஆனால் அதற்கு இடம்கொடுக்காமல் உள்நாட்டுத் தகராறு.

"பிரதமர் அலி மஹாதிக்கு ஐ.நா. சபையின் ஆதரவு இருக்கிறது. இவரும், அதிபரும், 'ஜெனரல்' ஐதீதும் அடிஸ் அபாபாவில் (அண்டை நாடான எதியோப்பியாவின் தலைநகர்) கூடி ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு தேர்தல் நடத்தலாம் என்று நல்ல எண்ணத்துடன் செயல்பட்டார்கள். ஆனால் உருப்படியான முடிவு எதையும் எடுக்காமல் விட்டு விட்டார்கள்.

"சோமாலியா மக்களுக்கும் இந்தத் தலைவர்களால் ஒரு புண்ணாக்கும் ஆகப் போவதில்லை என்று தெரிகிறது. ஆனால் சரியான வழிகாட்டல் இன்றி அவர்களாலும் எதுவும் செய்ய முடியவில்லை.



* சூர்யா கங்காதரன்



அமெரிக்கா சோமாலியாவுக்கு உணவுப் பொருள்கள் அனுப்புகிறது. அதையெல்லாம் லாரியில் எடுத்து வரும்போதே சமூக விரோதிகள் வளைத்துப் போட்டுக் கொள்கிறார்கள்.....

"அமெரிக்கா பரிதாபப்பட்டு சோமாலியாவுக்கு உணவுப் பொருள்கள் அனுப்புகிறது. அதையெல்லாம் லாரியில் எடுத்து வரும்போதே சமூக விரோதிகள் வளைத்துப் போட்டுக் கொள்கிறார்கள்; பிறகு அதிகபட்ச விலைக்கு அவற்றை விற்றுக் கொழுக்கிறார்கள்!

"ஐ.நா. சபை பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்த பிறகு உணவுப் பொருட்கள் ஓரளவுக்கு விநியோகமாகின்றன. ஆனால் ஐ.நா.வின் படை நிரந்தரமாக சோமாலியாவில் இருக்க முடியாதே!

"பேசாமல் ஐ.நாவை 'தர்மகர்த்தா' வாக்கி சோமாலிய அரசை மேற்பார்வை பார்க்கச் சொல்லலாம் என்றால் அதிலும் பிரச்னை. ஐ.நா.வின் பாதுகாப்புப் படையைச் சேர்ந்த பாகிஸ்தானி வீரர்கள் ஏராளமான சோமாலி மக்களைச் சுட்டுக் கொன்று ஐ.நா.வுக்கு இருந்த நற்பெயரை நிப்பேராக்கி விட்டார்கள்!

"சோமாலியா தலைநகரான மொகதிஷுவில் வியாபாரம் செய்து வந்த குஜராத்திகள் பலர் மூட்டை முடிச்சுகளுடன் வேறு நாடுகளுக்குப் போய் விட்டார்கள். ஜெர்மனிக்கும் மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் சோமாலிய மக்கள் அகதிகளாகப் போய்க் கொண்டிருக்கிறார்கள்...

"தலைவர்களின் சுயநலத்தால் மக்கள் வேதனைப்படுவதன் உச்சகட்டத்தை சோமாலியாவில் பார்க்கிறோம்."

சந்திப்பு : எஸ்.வி.என்.
படம் : கோபிநாத்

* நவீன அலுவலகம்



* சண்முகம்

'பெனிஃபிட் ஃபண்டு' என்றும் 'நலநிதி' என்றும் ஏராளமான நிறுவனங்கள். இவற்றின் நம்பகத்தன்மையை மக்கள் எப்படி கணிப்பது? விளக்குகிறார், ஆழ்வார்பேட்டை நல நிதியின் நிர்வாக இயக்குனர் சண்முகம்....

# நலநிதிகளும் நம்பகத்தன்மையும்

"நாங்கள் மூன்று வருடங்களுக்கு முன் ஆழ்வார்பேட்டை நல நிதியை ஆரம்பித்த போது, பதினேழு லட்ச ரூபாய்தான் டெபாஸிட். இன்றைக்கு மூன்று கோடி ரூபாய். இன்னும் மூன்றே மாதங்களில் ஐந்து கோடியைத் தொட்டுவிடுவோம்" என்று அதன் நிர்வாக இயக்குனர் சண்முகம் தெரிவித்தபோது, சற்று வியப்பு உண்டானது உண்மை.

"என்னதான் கூடுதல் வட்டி கொடுப்பதாக அறிவித்தாலும், மக்களிடையே நம்பகத்தன்மை எளிதில் உருவாகாத வரை, குறைந்த காலத்திலேயே கோடி ரூபாய்க்கு மேல் டெபாசிட் பெறுவது கடினம் அல்லவா....? இது எப்படி முடிந்தது?" என்று கேட்டோம்.

"முதலில் நீங்கள் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும் : எல்லா ஃபண்டுகளும் நிதி கம்பெனிகள் அல்ல. ஒரு வருடம் லாபகரமாக இயங்கி, அந்த ஒரு வருடத்துக்குள் ஆயிரம் உறுப்பினர்கள் சேர்ந்த பிறகு, கம்பெனி லா போர்டு அங்கீகாரம் பெற்றால் மட்டுமே அது 'நிதி'. பிறகு மத்திய அரசின் கெஜட்டில் அது வெளியாக வேண்டும். அப்போதுதான் நிதி கம்பெனி முழுமை பெறுகிறது. வருடாந்தரக் கூட்டம் முடிந்த பிறகு, கணக்குகளை கம்பெனி லா போர்டுக்கும், ரிசர்வ் வங்கிக்கும் அனுப்பி வைக்க வேண்டும். அவர்களுக்கு ஏதேனும் சந்தேகம் எழும் பட்சத்தில் நிர்வாகிகளை விவரம் தரும்படிக் கேட்பார்கள். முறையான அங்கீகாரம் பெறாமலும், தொடர்ந்து வருடா வருடம் நஷ்டம் காண்பித்தும் நடத்தப் பெறும் நிதி கம்பெனிகள் இருக்கின்றன அல்லவா? அவைதான் மக்களிடையே நம்பகத்தன்மை பெற முடியாமல் போகும்...." என்றார் சண்முகம்.

கம்பெனிகள் சட்டம் 620-A வின் கீழ் பதிவு செய்யப்படுபவை இந்த நிதி கம்பெனிகள். இயக்குனர்கள் தேர்ந்தெடுக்கப்

பட்டு இவற்றை நிர்வகிக்கிறார்கள். ஒரு நிதி நிறுவனத்தில் கடன் பெறவோ, டெபாசிட் செய்யவோ வேண்டுமானால், அதில் உறுப்பினராக வேண்டும்.

''எங்கள் உறுப்பினர் சந்தா வருடத்துக்குப் பதினோரு ரூபாய். அத்தனை உறுப்பினர்களும் மத்திய தரக் குடும்பத்தினர் தான். கொடுக்கல் - வாங்கல் எங்கள் உறுப்பினர்களுக்குள்ளேயே நடக்கிறது!'' என்கிறார் சண்முகம்.

தங்க நகைகள் மீது கொடுக்கும் கடன்களுக்கான வட்டியும், சென்னை நகர எல்லைக்குள் இருக்கும் சொத்துக்கள் மீது தரப்படும் கடன்களுக்கான வட்டியுமே நிதி கம்பெனியின் வருமானம். ''இந்த வருவாயை,வேறு வியாபாரங்களில் திருப்பி

## மாம்பழங்கள் : 150 வகை!

150 வகையான மாம்பழங்களுடன் சமீபத்தில் நடந்த கிருஷ்ணகிரி மாம்பழக் கண் காட்சியில் ''யானைபசந்த்'' என்ற பெயருடைய மாம்பழம் காணப்பட்டது. பையூர் விவசாய ஆராய்ச்சி மன்றத்தில் விருத்தி செய்யப்பட்ட இந்தப் பழத்தின் எடை $2^1/_2$ கிலோ!

விட்டு முதலீடு செய்து, நஷ்டமடையும் போதுதான், 'ரிஸ்க்' உருவாகிறது! இல்லை என்றால் 100% பாதுகாப்பு!''

''அடகு வைக்கப்படும் நகைகள் எல்லாமே மீட்கப்பட்டு விடுகின்றனவா?''

''இல்லை. சிலர் வைப்பதோடு சரி, பிறகு மறந்தே விடுவார்கள். அதை ஏலம் விட்டு, நிதிக்குச் சேர வேண்டிய தொகையைக் கணக்கில் சேர்த்துவிடுவோம். ஒரு கிராம் தங்கம் 300 ரூபாய் என்று கணக்கிட்டு நகைக் கடன் கொடுப்பதால், நஷ்டம் எதுவும் ஏற்படுவதில்லை.''

''மற்ற நிதி நிறுவனங்கள் 14%, 15%, என்று கொடுக்கும் போது நலநிதிகள் மட்டும் 19%, 20% வட்டி தருவது எப்படி சாத்தியமாகிறது?''

''ரிசர்வ் வங்கி, எங்களை பெனிஃபிட் பண்டு அல்லது நிதி என்று அங்கீகரித்த பிறகு, பிற நிதி நிறுவனங்களிலிருந்து மாறுபட்ட நிலையில் இயங்க முடியும். அதிகபட்ச வட்டி கொடுக்க முடியும். ஆனால் அப்படிக் கொடுக்கக் கூடிய அளவுக்கு, நகை அல்லது அசையாச் சொத்து மீது நாங்கள் வழங்கும் கடனுக்கு வட்டி விகிதங்கள் அமைந்திருக்கின்றன.''

''நடராஜ் பாண்டு என்று அறிவித்திருகிறீர்களே? அதில் முதலீடு செய்பவருக்கு என்ன லாபம்?''

''50,000 ரூபாய் முதலீடு செய்தால், 5 வருடங்களுக்குப் பிறகு வட்டியுடன் சேர்த்து 1,41,000 ரூபாய் திரும்பப் பெறலாம். இடையே கடன் எதுவும் இதிலிருந்து எடுக்காமல் இருந்தால், போனஸாக 10,000 ரூபாய் கொடுக்கிறோம். நிதி கம்பெனி என்ற அங்கீகாரம் பெறாமலும், தொடர்ந்து ஐந்து வருடங்களாக நஷ்டத்தில் இயங்கி வரும் நல நிதிகள் சிலவும் கூட, இப்படிப்பட்ட பாண்டுகளை அறிமுகப்படுத்தியிருப்பதுதான் கவலைக்குரிய விஷயம். பொது மக்கள்தான் கவனமாக இருக்க வேண்டும்.''

**ச**ண்முகம், நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவர். தலை முறை தலை முறைகளாகப் பணம் கொடுக்கல் வாங்கலில் நாணயமாகச் செயலாற்றிப் பெயர் பெற்ற சமூகம். சொந்த ஊர் காரைக்குடி. ஆனாலும் இளமையிலேயே மைசூரில் குடியேறிவிட்டவர். மேற்படிப்புக்காக இங்கிலாந்து சென்று இரண்டு ஆண்டுகள் அங்கே கல்வி கற்று, பிறகு இந்தியா திரும்பி, மெக்கானிகல் இஞ்சினீயரிங் பட்டதாரி ஆனவர். பெங்களூரில் இயங்கி வந்த, தந்தையின் தொழிற்சாலையிலேயே, அவருக்கு உதவியாக இருந்தார். கன்னடமும், ஆங்கிலமும் சரளமாகப் பேசக்கூடியவர்.

குடகு மலையில் சண்முகத்துக்குக் காப்பித் தோட்டங்கள் இருக்கின்றன. ஏற்றுமதித் துறையிலும் ஈடுபட்டிருக்கும் சண்முகம், கம்பளங்கள் முதலிய தயாரிப்புக்களை ஐரோப்பியச் சந்தைகளில் அறிமுகப்படுத்தியிருக்கிறார். ''ஆனால் நம் நாட்டின் சிவப்பு நாடாத் தாமதங்கள் அவர்களுக்கு எரிச்சலூட்டுகின்றன!'' என்கிறார்.

**செ**ன்னையின் பல்வேறு பகுதிகளில் தமது நலநிதியின் கிளைகளை நடத்தி வரும் சண்முகம், ''கம்ப்யூட்டர் மயமாக்கப்பட்ட இந்தக் கிளைகளை கம்ப்யூட்டர் மூலமே இணைக்கும் திட்டமும் இருக்கிறது. ஊழியர்கள் அன்பான துரிதமான சேவைக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள்!'' என்கிறார்.

– சித்தார்த்

படங்கள் : கோபிநாத்



● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.

*? சமீபத்தில் தங்களைக் கவலையடைய வைத்த சம்பவம்?*

! உங்களுடைய இன்னொரு கேள்விதான். 'ரஜினி படத்துக்கு டிக்கெட் கிடைக்காததால் இரண்டு சிறுவர்கள் தற்கொலை செய்து கொண்ட நிகழ்ச்சி பற்றி...' என்று கேட்டிருக்கிறீரே, அதுதான்.

● வி. கோ. மாதேஸ்வரன், ஈரோடு.

*? நாஞ்சில் மனோகரன் நீக்கம் பற்றி...?*

! மன்னிப்பு கேட்ட பிறகும் கட்சிக்குள் சேர்க்கப்படவில்லை. இதனால் கோபமுற்று ஏதும் அசம்பாவிதமாகச் செய்து விடாமல் அவர் அமைதி காப்பது நல்லது. பொறுமையாக இருந்தால் கோபம் தணிந்து, 'இத்தனை நாள் கொடுத்த தண்டனை போதும்' என்ற கருத்தில் மறுபடி சேர்த்துக் கொள்ளப் படலாம். மனோகரன் இதை மறந்தால் அவர் எங்கு சென்றாலும் மதிப்பிராது.

● ப. வெங்கட், வலங்கைமான்.

*? பார்களை மூடி விட்டால் மக்களைத் திருத்தி விட முடியுமா?*

! ஒருவன் திருந்துவதும் திருந்தாததும் அவனுடைய மன உறுதியைப் பொருத்த விஷயம். ஆனால் ஒருவன் கெட்டுப் போக அரசாங்கமே துணைநின்று தூண்டி விடுவது கொடுமை.

● கே. மணிகண்டன், திருப்பூர்.

*? அறுபது ஆண்டு கால இந்திய திரைப்பட வரலாற்றிலே தமிழில்தான் அதிகமாக (4096) திரைப்படங்கள் தயாரிக்கப்பட்டுள்ளனவாமே?*

! வெறும் எண்ணிக்கையால் வெற்றி கண்டும் வரலாறு படைத்தும் பயனில்லை. எடுக்கப்படும் ஐயாயிரமாவது படம் உலகளாவிய கவனத்தைக் கவர்ந்தால் பெருமைப் படலாம்.

● ஆ. தங்கசாமி, கருமாபுரத்தானூர்.

*? ஊழலற்ற ஆட்சி நடத்தும் கட்சி நமது நாட்டில் இருக்கிறதா?*

! ரொம்ப ஆதங்கத்தோடதான் கேட்டிருக்கீங்க. ஆமா, உங்க பேரு ஆ. தங்கசாமியா? ஆதங்கசாமியா?

● கே. எம். ரவிச்சந்திரன், மதுரை.

*? இன்றைய அரசியலில் நடந்து வரும் வெட்கப்படத் தக்க உண்மை என்ன?*

! வெட்கப்படத்தக்க உண்மையாய் இருக்கிறதே என்பதால் அதைப் பொய்யால் பூசி மெழுகும் வெட்கக்கேடுதான்!

● எல்.ஆர். விஜயகுமார், சென்னை.

*? மதுரை - காமராஜர் பல்கலைக் கழகமும் ஜெயலலிதாவுக்கு டாக்டர் பட்டம் வழங்கவிருப்பது குறித்து?*

! கௌரவ டாக்டர் பட்டங்களும் சரி, ஆய்வு செய்து பெறப் படும் டாக்டர் பட்டங்களும் சரி, இங்கே மதிப்பிழந்து

* அரசியலில் புகுந்தால்...

## 'பார்'களை மூடி

ரொம்பக் காலம் ஆகி விட்டது. கொடுத்து விட்டுப் போகட்டும். ஆனால் அதற்காக விழா மண்டபத்தைப் புதுப்பிக்கச் செலவிடப்படும் தொகையை நினைத்தால் தூக்கிவாரிப் போடுகிறது. வரிப் பணத்தை வீணடிப்பதற்கு வரம்பே இல்லாமல் போய் விட்டது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? 'விடுதலைப் புலிகளுக்கும் வாழப்பாடிக்கும் தொடர்பு உள்ளது' என்று அமைச்சர் மு. தென்னவன் கூறுகிறாரே?*

! குற்றச்சாட்டுக்களைப் பரிமாறிக் கொள்ளட்டும்; அதில் கொஞ்சம் கற்பனைத் திறனையாவது காட்டக் கூடாதா? அரைத்த மாவையே அரைத்து...

● டி. ஜெயசீலன், கோவில்பத்து.

*? சுப்பிரமணிய சுவாமியை நீங்கள் வணங்கியதுண்டா?*

! ஓ! பழனி, சுவாமிமலை, திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், திருத்தணி, மயிலம், குன்றக்குடி, இன்னும் பல தலங்களிலும்.

● என். சம்பத், தூத்துக்குடி.

*? சொந்தச் செலவில் வெளியூர் செல்லும் பயணி*

☐ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. ஆர். உபேந்திரன்,
44, கீ. கோவில் 3ம் தெரு,
மா. சாவடி, தஞ்சை - 613 001.

களுக்கு ரயிலில் இடம் கிடைக்காத போது, சபாநாயகர்களுக்கென்று தனி ரயில் விடுவது அதிகார துஷ்பிரயோகமாகாதா?
! சரியாப் போச்சு, அவர்களுக்குத் தனி விமானம் ஏற்பாடு பண்ணாமல் விட்டாங்களேன்னு சந்தோஷப்படுவீங்களா... அதை விட்டு...

● மு. இரவிச்சந்திரன், சேலம்.
? தவறு செய்த அரசு அதிகாரிகளை தோப்புக்கரணம் போடச் சொன்னாராமே லல்லு பிரசாத் யாதவ்?
! இங்கே சாஷ்டாங்க நமஸ்காரம்தான்!

● பி. ஜெயப்பிரகாஷ், வேட்டைக்காரன்புதூர்.
? 'அத்வானியைப் பார்க்கும்போதெல்லாம் அண்ணல் காந்தியைப் பார்ப்பது போல உள்ளது' என்று நடிகை லட்சுமி கூறியுள்ளது பற்றி...?
! என்ன செய்ய, அரசியலில் புகுந்து விட்டால் இந் நாட்டில் எப்படியெல்லாமோ பிதற்ற வேண்டியிருக்கிறது.

● கே. கணேஷ், சென்னை - 16.
? "நான் இருக்கும் வரை அ.தி.மு.கவை யாராலும் பிளவுபடுத்த முடியாது" என்று ஜெ. கூறியிருக்கிறாரே?
! உண்மைதான், அவரே அந்தக் காரியத்தில் இறங்கியிருக்கும் போது வேறு யார்தான் போட்டி போட முடியும்!

● லல்லி பாலகிருஷ்ணன், மதுரை.
? "கட்சித் தலைவர்கள் நன்கொடை பெறுவதை ஊழல் என்றோ குற்றம் என்றோ சொல்வது கோமாளித்தனம்" என வாழப்பாடியார் கூறியுள்ளது பற்றி?
! ஒரு வகையில் இது ஓர் ஒப்புதல் வாக்குமூலம் என்பது ஒருபுறமிருக்க; நன்கொடைகள் கட்சிக்குப் பகிரங்கமாகத் தரப்படும் போது யாரும் ஆட்சேபிக்க முடியாது. கறுப்புப் பணம் விளையாடும் போதும், ரகசியமாகப் பெறப்படும் போதும், பதிலுக்குச் சலுகைகள் உறுதி செய்யப்படும் போதும் லஞ்ச ஊழல் ஆகிறது.

# விட்டால் மக்களைத் திருத்த முடியுமா?

● கண். சிவகுமார், திருமருகல்.
? வாரந்தோறும் கல்கியில் என் பெயர் இடம்பெற நான் செய்ய வேண்டியது என்னவோ?
! ரொம்ப சிம்பிள். உங்கள் பெயரைக் 'கல்கி' என்று மாற்றிக் கொண்டு விடுங்களேன்!

● ஈ.ஏ. அப்துன் நஸீர், வலங்கைமான்.
? மெட்ரோ நிகழ்ச்சியைத் தமிழக தென் பகுதி மக்கள் பார்க்க முடியவில்லையே?
! புண்ணியசாலிகள்.




* ஒப்புதல் வாக்குமூலம்

● கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர். ☐
? சேஷன் விசாரிக்கக் கூடாது என்றுதான் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. ஆனால் ஏதோ குற்றமற்றவர் என்று நிரூபிக்கப்பட்டு விட்டது போல் அல்லவா செய்திகள் சித்திரிக்கின்றன?
! 'ஜெ'வின் அதிர்ஷ்டம் தான், சு. சுவாமியின் வழக்கறிஞர் மனைவி சேஷனுக்காக ஒரு வழக்கில் ஆஜராகிறார். அதனால் சு. சுவாமியின் இந்தக் குற்றச்சாட்டை சேஷன் விசாரிக்கத் தடை. ஆனால், 'இந்தக் குற்றச்சாட்டே ஆதாரமற்றது; அதனால் தேர்தல் கமிஷனுக்கே இந்தக் குற்றச்சாட்டு போக வேண்டியதில்லை' என்ற 'ஜெ'வின் வாதம் நீதிபதியால் ஏற்கப்படவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும். ஆக ஜெ. அடைந்துள்ள வெற்றி குறுக்கு விழுந்தாலும் மண் ஒட்டவில்லை கதைதான்.


* கடவுள் எதற்கு?


* விசாரிக்கத் தடை.



● ஏ. ஜுஹ்பர் காதர், அரியநாயகிபுரம்.
? "கடவுளே வந்தாலும் ஜெயலலிதாவைக் காப்பாற்ற முடியாது" என்கிறாரே வாழப்பாடி?
! ஒரு கோடி விவகாரப் பிரதமர் இருக்கக் கடவுள் எதற்கு?


* பெருமையாக...

* டாக்டர் பட்டம்



# பனிப் பாறை



ராமனை அழைத்துக் கொண்டு வெளியே வந்த நித்யா ஒரு கணம் நின்றாள்.

''ராமா - நீ வீட்டுக்குப் போறதானாப் போ. இல்லை இங்கேயே உள்ளே உட்கார்ந் திருக்கிறதானா உட்கார்ந்திரு.''

''இல்லை அக்கா. நானும் உன்னோட வர்றேன்.''

''என்னோடவா? என் கூட நீ இப்போ வர்றதுனாலே உனக்கு நல்லது ஏதும் ஏற் படப் போறதில்லை.''

''பரவாயில்லை அக்கா. நான்...'

''ஏன்? விகவத்தை மறுபடியும் பார்க் கத் துணிச்சல் இல்லையா? பயமா இருக்கா? நீ இப்போ என் கூட வரது புலிக்குகைக் குள்ளே தலையை வலியப் போய் நீட்டற மாதிரி இருக்கும்...''

எஸ்.பி. ஃபகிர் முகம்மது மனை வியை இழந்த நாற்பத்தியொன்பது வயது மனிதர். பதினெட்டு வயது மகள் மும்தா ஜுடனும், அக்கா சபீரா பேகத்துடனும் வசித்து வந்தார். இவர்களைப் பார்த்ததும் இன்முகத்தோடு வரவேற்றார். சபீத் நித்யா வை அறிமுகப்படுத்தினான். ''ஹலோ யங் லேடி! உங்களைப் பற்றி சபீத் நிறையவே சொல்லியிருக்கான். உங்களைச் சந்திச்சதுல ரொம்ப பெருமை அடையறேன்.''

ஒரு உயர்ந்த அதிகாரியின் ஆணவமோ, தோரணையோ இல்லாமல் அவர் சகஜ மாகப் பேசியது நித்யாவைக் கவர்ந்தது.

முதலில் தயக்கத்துடனும், பிறகு சரள மாகவும் அவள் முதலிலிருந்து விஷயங் களை எடுத்துக் கூறினாள். அவர் ஆர்வத் துடன் கூர்ந்து கவனித்தார். அவள் பேசி முடித்த சில நிமிடங்களுக்கு அவர் ஆழ்ந்த சிந்தனையிலிருந்தார்.

பிறகு நித்யாவைப் பார்த்துக் கேட் டார் -

''மிஸ் நித்யா - இந்த சிமெண்ட் சப்ளை வாங்கினதுல ஒரு மூட்டையோ, இல்லை - அரை மூட்டையாவது மிச்சம் இருக்கா?''

''அன்ஃபார்ச்சனேட்லி - இல்லை சார். கடைசி சப்ளை - அதாவது அந்த இடிஞ்சு போன 'லீலிங்' போடன்னு உபயோகம் பண்ணின ஸ்டாக் மீறல்லை. ஆனா அதுக் குப் பிறகு மறுபடியும் ஏழு மூட்டை வந்தது. அது அப்படியே இருக்கு. அதுல கலப்பட சிமெண்டா, நல்ல குவாலிடியான்னு தெரி யாது சார். அதையெல்லாம் அதிகாரிங்க 'சீல்' பண்ணிட்டாங்க.''

''ஓ! அப்போ நீங்க வருத்தப்பட வேண் டியதில்லை - அப்பாடீன்னு என் மனசுல படுதம்மா. ஏன்னா உடனடியா அனுப்பி வைச்சதுன்னா, அதுலயும் கலப்படம் இருக்கலாம். அப்புறம் - எதுக்கும் நீங்க சொக்கலிங்கத்தைப் போய்ப் பாருங்க. அவன் 'அப்ரூவரா' மாறிட்டான்னா அந்த

ஆபஸ்தம்பன்

விகவத்தை மாட்டி வைக்கலாம்.''

''யெஸ் சார். ஆனா நான் வந்திருக்கிற விஷயம் இதைவிட சீரியஸானது சார்''-என்று தொடங்கின நித்யாவை அவர் மடக்கினார்.

''இரும்மா. மொதல்ல இதை முடிச்சிடலாம்,'' என்றவர் ராமனின் பக்கம் திரும்பி, ஒருவித கண்டிப்புடன் பேசினார்.

''உன்னைப் பார்த்துக் கோபப்படறதா, இல்லை பரிதாபப்படறதா தெரியலை. ஆனா ஒண்ணு - நீ இப்போ இங்கே இவங்களோட வந்திருக்கறதையும், உன்னோட முகத்துல இருக்கிற பாவத்தையும் பார்த்தா நீ இவங்களுக்கு உதவி செய்யப் போறேன்னு தோணுது. சரி... இப்போ விஷயத்துக்கு வருவோம். நீ சொக்கலிங்கத்துக்குக் கொடுத்த பணம் கேஷா இல்லை செக்கா? உன்னோட அக்கவுண்டில டிரா பண்ணதா, இல்லை அந்த விகவம் கொடுத்ததா?''

ராமன் பயந்தவாறு பேசினான்.

''விகவம்தான் கொடுத்தார். காலைல செல்ஃப் செக்கைக் குடுத்து டிரா பண்ணச் சொன்னார். அப்புறம் சொக்கலிங்கத்தை என்னோட வீட்டுக்குக் கூட்டிண்டு போயி விவரத்தைச் சொல்லிப் பணத்தைக் கொடுக்கச் சொன்னார். விகவத்தோட காரில போய்த்தான் பணத்தை டிரா பண்ணினேன்.''

''ஏம்பா, சொந்த அக்கா கம்பெனியைக் கவுக்க உடந்தையாப் போயிட்டியே! ஒன்ன என்ன செய்ய! சரி - சொக்கலிங்கத்துக்கிட்டே ஏதாச்சும் ரசீது வாங்ினாயா?''

''இல்லை சார்.''

எஸ். பி. சில நிமிடங்கள் ஏதோ யோசனையில் அமர்ந்திருந்தார். பிறகு நித்யாவைப் பார்த்தார்.

''நீங்க ஏதோ கேக்கணும்னீங்களே?''

''ஆமாம் சார்'' - என்றவள் அன்று காலை ராமன் கூறிய விஷயத்தைக் கூறி விட்டு,

''ஏன் சார், இவங்களைக் கையும் களவுமாப் பிடிக்க, விகவத்தை 'அலாட்' கேஸுல உள்ளே தள்ள முடியாது?''

''யெஸ்'' என்றார் அவர். ''இந்த விஷயத்துல நான் உங்களுக்கு உதவறேன்மா. மிஸ்டர் ராமன் நீங்க உங்கம்மாவைப் பார்க்கப் போறாப் போல அவுங்க வீட்டுக்குப் போயிட்டு உங்க வைஃப் மிஸ் நித்யாவோட இருக்கிறதைத் தெரியப்படுத்துங்க. மிஸ் நித்யா - பகல் ரெண்டு மணி வரையிலும் அந்தப் பெண்ணை வெளியில விடாதீங்க. நான் என்னோட ரெண்டு ஆளுங்களை மஃப்டியில அனுப்பி வைக்கிறேன். நீங்களும் ஸரீதும் அடையாறு போற ரோடுல கார்ல வெயிட் பண்ணுங்க. அந்தப் பெண்ணை



16

ரெண்டு மணிக்கு மேல அந்த ரோடுல நடந்து வரச் சொல்லுங்க. அது ஆள் நடமாட்டம் அதிகமில்லாத ரோடு. என்னோட யூகம் சரியாயிருந்தா, விகவத்தோட அடியாளுங்க அங்க வெக்கத்தான் தாக்கு வாங்க. மிச்சத்தை நானும் என்னோட ஆளுங்களுமாப் பார்த்துக்கறோம்.''

''நீங்களா சார்!''

''ஆமாம் மிஸ் நித்யா. என்னோட வருங்கால மருமகப் புள்ளையோட சினேகிதிக்காக இது கூட என்னால செய்ய முடியாதா என்ன?''

ராமன் நேராக விகவத்தின் வீடு நோக்கிச் சென்றான். நித்யா விடுவிடென்று தன் வீடு நோக்கி நடந்தாள். பிரசன்னாவைக் கண்டதும் மனம் லேசாகிப் போனது.

''நம்ம 'பரோகிராம்ல' ஒரு சின்ன மாற்றம் பிரசன்னா.''

பிரசன்னாவிடமும், ராதாவிடமும் ஸுப்ரின்டென்டெண்டு வீட்டில் பேசியதையெல்லாம் விவரமாகக் கூறினாள்.

''ஏன் பிரசன்னா, சொக்கலிங்கத்தை நாளைக்குப் போய்ப் பார்த்தால் என்ன?''

பிரசன்னா சற்று யோசித்தான் -

''இது எதிர்பாராத திருப்பம் நித்யா. நான் சொக்கலிங்கத்தைப் போய்ப் பார்த்துட்டு மூணு மணி போல இங்கே வர்றேனே.''

இதுவரையில் மௌனமாக இருந்த ராதா குரலில் கலவரத்துடன் பேசினாள்.

''என்ன அக்கா இது? உங்க தம்பி போய் இப்பவே விகவத்தை 'வார்ன்' பண்ணிட மாட்டார்னு என்ன நிச்சயம்?''

நித்யா பரிவுடன் ராதாவைப் பார்த்தாள்.

''அவன் இனிமேல் விகவம் இருக்கற பக்கமே தலை வைக்க மாட்டான் ராதா. விகவம் எப்படியும் மாட்டிக்கப் போறான். அப்படி இருக்கறப்போ, சீக்கிரமே கழண்டுக்கறது விவேகம்னு அவனுக்குப் பட்டிருக்கும். ஏதோ... எப்படியாவது புத்தி வந்தால் சரி... ''

ராதா பதில் சொல்லவில்லை.

''ராதா'' - நித்யாவின் குரல் இப்போது அபரிமிதமான பாசத்திலும் பரிவிலும் தோய்ந்து குழைந்து ஒலித்தது.

''மனுஷன் தப்புப் பண்றது சகஜம்மா. ஏதாவது ஒரு தப்பாவது பண்ணாமலிருக்கறவாளை விரல் விட்டு எண்ணலாம். ஆனா சந்தர்ப்பவசத்தால தப்பு பண்றதும், அதுக்கப்புறம் நாம தப்பு பண்ணிட்டோமேன்னு உருகறதும் பெரிய விஷயம். அதுக்கும் மேல இருக்கிற பெரிய விஷயம் என்னன்னா, அப்படித் தப்பு செய்தவங்களை மன்னிக்கிறது... நம்ம வீம்பு பிடிச்சிண்டு இருந்தோமேயானா, வாழ்க்கையில நிறைய இனிமைகளை நாம இழக்க வேண்டி வரும்.''

ராதாவின் முகம் இறுகிக் கிடந்தது. நித்யாவே மீண்டும் பேசினாள்.

''உன்னை ஆள் வைச்சு அடிக்கப் போறான்னு தெரிஞ்சதும் பறந்தடிச்சுண்டு வந்திருக்கான்!''

இதற்கும் ராதா பதில் கூறவில்லை.

பிரசன்னா எழுந்தான்.

''சரி - நான் புறப்படறேன்.''

இரண்டு நாட்களுக்கு முன் ராதாவை அடிக்க வந்த விகவத்தின் கையாட்களை ஃபகீர் முகமதின் உதவியுடன் கைது செய்தாகி விட்டது. இந்நேரம் அவர்கள் கொடுத்திருக்கும் வாக்குமூலத்தின் உதவியுடன் விகவத்தைக் கைது செய்திருக்கக்கூடும். துர்காவை நினைக்கையிலே மனம் வேதனை அடைந்தாலும், கொலைக்கும் அஞ்சாதவனுக்குச் சிறைவாசம் தேவைதான் என்று தோன்றியது. வேலை நடந்து கொண்டிருக்கும் போது இந்த விபத்து ஏற்பட்டிருந்தால் எத்தனை உயிர்கள் பலியாகி விட்டிருக்கும்!

'அது சரி... ஃபகீர் முகம்மது ஃபோன் செய்வதாகக் கூறியிருந்தார். ஏன் செய்யவில்லை?' நித்யா இப்படி நினைத்தவுடனேயே தொலைபேசி ஒலித்தது.

''ஹலோ. நித்யா பேசறேன்.''

''குட் ஈவ்னிங் மேடம். நான் ஃபகீர் பேசறேன்'' - குபீரென்று கால் முதல் தலை வரையில் மகிழ்ச்சி புரண்டோடியது.

''குட்ஈவ்னிங் சார். சொல்லுங்க.''

''என்ன சொல்ல, எப்படிச் சொல்ல - ஒண்ணும் புரியலீங்க. உங்களுக்கு உதவி செய்யணும்னு எத்தனை ஆர்வத்தோட இருந்தேன்னு கடவுளுக்குத்தான் தெரியும். ஆனா...''

''என்னாச்சு சார்? எதுக்கு வருத்தப் படறீங்க?'' அவள் வயிற்றில் லேசான கலக்கம் ஜனித்தது.

''ஐ.ஜி. ஃபோன் பண்ணினாரும்மா. அந்த விகவம் லேசுப்பட்ட ஆளில்லை. பெரிய இடத்துச் சம்பந்தமெல்லாம் வெச்சிருக்கான். அந்த அடியாளுங்களை விடுதலை செய்யச் சொல்லி அரசியல் பிரமுகர் ஒருத்தர்கிட்டேருந்து ஐ.ஜிக்குத் தகவல் வந்துதாம்.''

''குட் காட்! விடுதலை பண்ணிட்டீங்களா?''

''பண்ண வேண்டிய நெருக்கடிம்மா. இதைச் சொல்றதுக்கு வருத்தமா - அவமானமா இருக்கும்மா. என்னால ஒண்ணும் முடியலைமா. ஐ.ஜி. சொன்னாரு விகவத்துக்கிட்டேருந்து வேணுமானா நஷ்டஈடு

> ''நேத்து 'ஆடிடிங்' நடக்கும்போது எல்லாரும் கொட்டக் கொட்ட விழிச்சுண்டிருக்க, மானேஜர் ஒரு தந்திரம் பண்ணினார்.''
>
> ''என்ன...?''
>
> ''ஆபீஸ் ஃபைல்ல பாம்பு புகுந்துருச்சுன்னு புரளியைக் கிளப்பி விட்டுட்டார்!''
>
> - தஞ்சைத் தரணியன்

வாங்கித் தர முயற்சி பண்றதா... நீங்க ஏதா வது தகராறு பண்ணினீங்கன்னா, நீங்களே அந்த அடியாளுங்களை ஏற்பாடு செஞ்சு பணம் கொடுத்ததாகக் கேசை மாத்தி எழுதச் சொல்லிட்டாங்க!''

''கடவுளே! என்ன அநியாயம் சார்!''

''மிஸ் நித்யா. நான் உண்மையிலேயே ரொம்பவும் வருத்தப்படறேம்மா. இந்த விஷயத்தை நீங்க இத்தோட விட்டுடுங்க. பழைய சினிமா வசனம் ஒண்ணு உண் டும்மா - பானை பாறையோட மோதினா லும், பாறை பானையோட மோதினாலும் உடையறது என்னவோ பானைதான் - அப்ப டீன்னு.''

நித்யா உடைந்து போய் உட்கார்ந் திருந்தாள். வெளியே சென்றிருந்த ராதா, உள்ளே நுழைந்தவள், நித்யாவின் முகத் தைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தாள்.

''என்னக்கா ஆச்சு?''

நித்யா அவளைப் பார்த்துப் புன்னகை புரிய முயற்சி செய்தாள்.

''ராதா எந்தப் பக்கம் தர்மம் இருக்கோ அந்தப் பக்கம் வெற்றி நிச்சயம்னு கிருஷ்ண பரமாத்மா சொல்லியிருக்கிறது இந்த யுகத் துக்குப் பொருந்தாதுன்னு நினைக்கறப்போ மனசு வேதனையா இருக்கு.''

''என்னக்கா நடந்தது? ஏன் இப்படி வருத்தப்படறீங்க?''

நித்யா ஃபகீர் முகம்மதுவின் உரையா டலை அப்படியே விரிவாகக் கூறினாள்.

''முருகா! இது என்ன அக்கிரமம் அக்கா! நம்மால ஒண்ணுமே செய்ய முடியாதா?''

''அந்த விகவத்தை யாராலேயும் ஒண்ணும் பண்ணி விட முடியாது - என்கிற மனப்பான்மை எனக்கு வந்துடுமோன்னு பயமா இருக்கு.''

''அக்கா - மனசை ஏன் தளரவிடறீங்க? இன்னமும் ஒண்ணும் மிஞ்சிப் போயி டலை. விசாரணை இருக்கில்லை? சொக்க லிங்கம் எந்த நிமிஷமும் அப்ரூவரா மாற சான்ஸ் இருக்கு. இல்லை? அப்புறம் இந்த விபத்துக்கு மூல காரணம் விகவம்தான் என்கிற விஷயம் வெளியே வராம போயி டுமா என்ன?''

''எனக்கு ஒண்ணும் புரியலை ராதா. அது அவன் செல்ஃப் போட்ட செக். சொக்க லிங்கத்துக்குப் பணம் கொடுத்ததை அவன் அப்பட்டமா மறுக்கலாம். இல்லையானா, அவனுக்குக் கூடப் பணம் கொடுத்து அவன் வாயை அடைக்கலாம். ராதா.. இனிமே ஒரே ஒரு வழிதான் இருக்கு. அந்த சிமெண்ட் மூட்டைகளில மட்டும் கலப்பட சிமெண்ட் இருந்துதானா...''

அழைப்பு மணி கிணுகிணுத்தது.

நித்யா எழுந்து கதவைத் திறந்தாள்.

பார்வதிதான் கடுகடுவென்ற முகத் துடன் உள்ளே வந்தாள்.

''வாம்மா. ஏது இந்த நேரத்துல? துர்கா சௌக்கியமா?''

''ஒரு பொம்மனாட்டி பண்ணக் கூடாத தைப் பண்ணிட்டு துர்கா சௌக்கியமான்னு வேறக் கேக்கறியா? உனக்கே நன்னா இருக்கா? நீ செய்யறது நியாயமாப் பட றதா?''

''நீ என்னம்மா சொல்றே? கொஞ்சம் புரியும்படியாத்தான் பேசேன்.''

''மாப்பிள்ளையை ஜெயிலுக்கு அனுப் பப் பார்க்கறியாமே? அந்தப் பொண்ணு புள்ளையாண்டிருக்கு.''

ஓ! விகவம் கடைசி அஸ்திரமாகப் 'பெண்ணின் புடைவைத் தலைப்பை' உப யோகிக்கிறானா!

''அம்மா! சின்னக் குழந்தையாட்டமாப் பேசாதே. அவன் சிமென்டுல கலப்படம் பண்ண வைக்க என்னோட தொழிலையே நாசம் பண்ணப் பார்த்தான். அது உன் கண்ணுல படலியா?'' நித்யா எரிச்சலுடன் கேட்டாள்.

''ஆமா! பொம்மனாட்டிக்கு என்ன பெரிய தொழில் வேண்டிக் கிடக்கு? உத் யோகம் புருஷ லட்சணம்னுவா. நீ உன் கம்பெனியை இழுத்து மூடிட்டு யாரையா வது கல்யாணம் பண்ணிண்டு அழகா குடித் தனம் நடத்து. அவன்கிட்ட நீ ஏன் மோதறே? துர்கா - ஒன்னோட தங்கை - நன்னா இருக் கணும்னு நீ பிரியப்படலையா?''

''என்னம்மா இது. அர்த்தமில்லாம பேசறே? அவன் ஒரு பெரிய போக்கிரிம்மா. துர்கா பேரில உள்ள அக்கறையினாலதான் அவனை ஜெயிலுக்கு அனுப்புறதுல தீவி ரமா இருக்கேன். ஒருக்கா உள்ள போயிட்டு வந்துட்டானேயானா திருந்திடுவானாயிருக் கும். அவன் அன்னைக்கு நம்மாத்துல காலை வெச்சப்பவே நான் உங்ககிட்டே எல்லாம் சொன்னேன். நீங்க எல்லாருமா என்னை எதிரியைப் பார்க்கறாப்போல பார்த்தேள். நல்லவேளை ராமனுக்காவது அவனைப் பத்திப் புரிஞ்சு போச்சு. துர்கா நல்லபடியா வாழணும்னுதாம்மா நான் ஆசைப்படறேன்.''

''அப்படி நீ நினைக்கறதானா மாப் பிள்ளையோட வழிக்குப் போகாதே.''

''என்னம்மா இது! இத்தனை சொன் னப்புறமும் அசடாட்டமா பேசறே?''

''ஆமாண்டியம்மா! நான் அசடு தான். உங்களைப் போல எல்லாம் 'டிகிரி' வாங்கியிருக்கல்லையே!''

அவள் கோபத்துடன் வெளியேறி னாள்.

(தொடரும்)



# சிவப்புக் கம்பளம் விரிக்கத் தயாரோ?

◆ பாரதிபாலனின் 'மனத்தின் நிறம்' சிறுகதை படித்தேன். பெண்களைத் தங்கள் வலையில் சிக்க வைத்து வீழ்த்தி விடும் ஆண்களின் நோக்கை அற்புதமாகச் சித்திரித்திருந்தார்.

தச்சன்வயல்,

சூர்யப்ரியசக்ரவர்த்தி.

◆ தலையங்கத்தில் பி.ஜே.பி. செய்ததையெல்லாம் பூசி மெழுகுவதைப் பார்க்கும்போது, அத்வானிக்கு ஜால்ரா தட்டவும், சிவப்புக் கம்பளம் விரிக்கவும் கல்கி தயாராகி விட்டது என்றே தோன்றுகிறது!

அரவக்குறிச்சிப்பட்டி,

எம். அசோக்ராஜா.

◆ இன்றைய காலகட்டத்தில் மலர்க் கிரீடம் அணிந்த அத்வானி, நாளை மக்கள் செல்வாக்குடன் பிரதமர் பதவி ஏற்றால், விளைவுகள் எப்படி இருக்கும் என்பதைக் கோடிட்டு, எச்சரிக்கைப்படுத்திய தலையங்கம், ரியலி வெரி, வெரி, சூப்பர்ப்!

கும்பகோணம்,

எஸ். கே. மூர்த்தி.

◆ 'அரசியலில் மதம் இருக்கின்றது. ஆனால் தர்மம் இல்லை'' என்று அத்வானி கூறுவது கேலிக்குரியது. அரசியலில் மதத்தை நுழைத்து, தர்மத்தை அழித்து வரும் இவரா இப்படிப் பேசுவது? அமைதியாக, சகோதரத்துவத்துடன் வாழ்ந்து வரும் பெரும்பான்மையான இந்திய மக்கள் அத்வானி பிரதமராவதை விரும்பவில்லை.

கும்பகோணம்,

மு. அய்யூப்கான்.

◆ 'புதிய பார்வை, புரியும்படியான கரு, தெளிவான வார்த்தைகள், அருமையான ஓவியம் - 'ஜிப்ஷா காத்திருக்கிறாள்' சிறுகதையைத் தந்து மூவருமே (ஆர்னிகா நாசர், அரஸ், கல்கி) அசத்தி விட்டீர்கள்!'

சத்திரம் கருப்பூர்,

மு. மன்சூர் அலி.

◆ கிச்சா எழுதிய தாத்தாவும், பேத்தாவும் சந்தித்துக் கொண்டதைப் படித்த போது கல்கியின் பழைய தையாண்டி எழுத்து ஞாபகம் வந்தது. ராவின் இன்றைய மன உளைச்சலை அப்படியே படம்பிடித்துக் காட்டியிருந்தார்.

மொரட்டுப்பாளையம்,

இராஜேஸ்வரன்.

◆ ஹர்ஷத் மேத்தாவுடைய ஆடம்பர வாழ்வின் அட்டவணை கண்டு அசந்து விட்டேன்! நமது நாட்டில் கொள்ளைக்கு எத்தனை வசதி! இதற்கெல்லாம் நமது நாட்டில் சுதந்திரம் தடையின்றி வழி விடுதே!

கருமாபுரத்தானூர்,

ஆ. தங்கசாமி.

◆ எதை நினைக்கிறோமோ அதுவேதான் நடக்கிறது. 'விவேகானந்தா' திருவாளர் ராஜகோபாலனின் அனுபவம் விடாமுயற்சிக்கு ஒரு எடுத்துக்காட்டு.

தோழகிரிப்பட்டி,

ஆர். முத்துக்குமரன்.

◆ நாத்திகவாதத்தை முக்கிய கொள்கையாக உடைய ஒரு கட்சியில், இன்று தைரியமாக ஆன்மீகத்தை உயர்த்திப் பேசும் ஒரு அமைச்சர் வந்திருக்கிறார் என்றால் துணிவோடு அவரைப் பாராட்டி வரவேற்கலாம். ஆனாலும் அமைச்சர் என்ற முறையில் அவர் வணங்கும் முதல் தெய்வம் 'ஜெ' எனும் தெய்வம் என்பதும் நமக்குப் புரிகிறது.

திருப்பூர், கே. மணிகண்டன்.

◆ இப்பொழுது மக்களிடம் பக்தி அதிகமாகி விட்டது என்றே சொல்லலாம். ஆனால் ஒழுக்கம் இல்லை. அதனால்தான் இந்தச் சீர்கேடு. 'ரவுடிகளை' அறங்காவலராக நியமிக்கும் நிர்வாகம், 'நாத்திகவாதம், பகுத்தறிவு கொள்கை தவறு - அதனால்தான் இப்படி ஆகிவிட்டது' என்று கூறுவது விந்தையாக இருக்கின்றது.

சென்னை - 101,

ஆர். பாலகிருஷ்ணன்.

◆ மக்கள் தொகைப் பெருக்கத்தால் மூச்சுத் திணறிக் கொண்டிருக்கும் நம் நாட்டில், அதுவும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை முனைப்புடன் செயல்படுத்தி வரும் தமிழகத்தில், ஒரு அமைச்சர் 'கடவுளாகப் பார்த்துக் கொடுக்கும் மக்கள் பேறை குறைப்பது சரியல்ல' எனப் பேட்டி கொடுப்பது வேதனையிலும் வேதனை.

கிட்டம்பட்டி,

கே. ஆர். அசோகன்.

◆ 8,000 ஆசிரியர்கள் நியமனம் கட்டுரை கண்டு மனவேதனை அடைந்தேன். காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போன கதையாய் இருந்தது! இப்படி டெண்டர் விட்டுப் பணியில் அமர்த்துவதை என்னவென்று சொல்வது...!

மேல்பட்டி, எல். மாறன்.

◆ கல்கி 4.7.93 இதழில் ஆசிரியர் நியமனம் பற்றிய கட்டுரை படித்தேன். அதில் முன்னாள் கல்வி அதிகாரி குமரி மாவட்டக்காரர்களை வேண்டுமென்றே வாய்ப்புக்கு இழுக்கிறார். எங்கள் மாவட்டத்தில் ஏதாவது போலி கல்வி நிறுவனத்தை அவர் சுட்டிக்காட்டத் தயாரா? கர்னாடகாவிலிருந்து போலி சான்றிதழ் பெற்று ஆசிரியர் பணி செய்து வருவதாகவும் கூறியிருக்கிறார். சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன் தமிழகத்தில் ஆசிரியர் பயிற்சி நிலையங்கள் இல்லாத சமயத்தில் பலரும் ஆசிரியர் பயிற்சிக்குக் கர்னாடகம் சென்றனர். என்னுடைய வீட்டில் கூட மூன்று சகோதரிகள் அங்கு சென்று படித்தார்கள். தோற்று, மறுபடி பரீட்சை எழுதி சிரமப்பட்டுத்தான் தேறினார்கள். போலி சான்றிதழ் பெறுவதெனில் உடனடியாக பாசாகி இருக்கலாமே!

கருங்கல்,

இரா. அலெக்ஸாண்டர்.



பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

காம்ப்ளானில் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச்சத்துக்கள் அடங்கியுள்ளன.

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது. அவர்களது வளர்ச்சிக்கு நேரடியாக உதவும் ஊட்டச்சத்து ப்ரோட்டீன்கள் ஆகும். அதனால்தான் உங்கள் குழந்தைகளுக்கு காம்ப்ளான் தேவைப்படுகிறது.

காம்ப்ளானில், வளரும் குழந்தைகளுக்கு உகந்த ப்ரோட்டீனாகிய பால் ப்ரோட்டீன் 20% உள்ளது. அத்துடன் இதில் அவர்களது ஆரோக்கியமான பரிபூரண வளர்ச்சிக்கென 22 இதர இன்றியமையாத சத்துணவுகளும் அடங்கியுள்ளன.




**23**
மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை

**காம்ப்ளான்®** – திட்டமிட்ட பரிபூரண உணவு.

GX/19/203 TAM

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka